# கல்கி

## பொருளடக்கம்

பிரமாதீச, ஆடி 14 ★ ஜுலை 29, 1973



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



★

**சிறுகதைச் சிறப்பிதழ்**

★

## ஸ்ரீ வரசித்தி விநாயகர் மகா கும்பாபிஷேகம்

சென்னை மயிலாப்பூரிலுள்ள வி. ஐ. டி. காலனியில் ஸ்ரீ வரசித்தி விநாயகருக்கு ஓர் அரிய சிறிய நூதன ஆலயம் எழுப்பப்பட்டிருக்கிறது. ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகளின் அருளாசியுடன் தொடங்கப்பட்ட இப்பணியானது தொழில் நுட்பக் கல்விக் கூட்டு இயக்குநர் திரு எஸ். வையாபுரி அவர்களின் தாராளமான உதவியாலும் தளராத உழைப்பாலும், அவருக்கு உறுதுணையாக நின்ற முன்னாள் மின்வாரிய சூப்பரிண்டண்டிங் என்சினீர் திரு டி. என். ராஜகோபாலின் நன்முயற்சியாலும், மற்றும் திருப்பணிக் குழுவின் ஊக்கத்தாலும், ஆஸ்திகப் பொது மக்களின் ஆதரவாலும் நிறைவு பெற்று, வருகிற விநாயக சதுர்த்தியாகிய ஆகஸ்டு 31-ந் தேதியன்று இவ்வாலயத்துக்கு மகா கும்பாபிஷேகம் நடக்கவிருக்கிறது.



ஆலயத்தில் குடிகொள்ளும் விநாயகப் பெருமானின் விக்கிரகம் ரத்னகிரி திரு பாலமுருகன் சுவாமிகளால் மனமுவந்து அளிக்கப்பட்டது என்பது குறிப்பிடத் தக்கது.

வரசித்தி விநாயகர் குடமுழுக்கு விழாவில் மக்கள் பெருமளவில் கலந்துகொண்டு பெருமானின் திரு அருளுக்குப் பாத்திரராக வேணும். திருப்பணிக்குப் பொருளுதவி அடியிற் காணும் முகவரிக்கு அனுப்பலாம்: திரு டி.என். ராஜகோபால், பொருளாளர், வரசித்தி விநாயகர் கோயில், 12, இரண்டாவது மெயின் ரோடு, வி. ஐ. டி. காலனி, சென்னை-4.

கல்கி

மலர் 32
இதழ் 52



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா

-- பாரதியார்

# கல்வித் துறையின் தலையான அம்சங்கள்

க. சந்தானம்

**ம**க்களின் அறிவு, பண்பாடு, நடத்தை இவற்றை உருவாக்குவதில் கல்விக்குப் பெருத்த பங்கு உண்டு. முன் காலங்களில் பள்ளிகளில் புத்தகப் படிப்புப் படித்தவர்கள் மிகக் குறைவே. ஆயினும் சம்பிரதாயங்கள் மூலமும், அநுபவத்தின் மூலமுமே பெரும்பாலோர் கல்வி பெற்றனர். நவீன காலத்தில் குழந்தைப் பருவத்திலிருந்தே கல்வி நிலையங்களில் படிப்புப் பெறுவது இன்றியமையாததாகிவிட்டது. எனவே மக்களின் மேம்பாட்டுக்காகப் பள்ளி-கல்லூரி படிப்பு முறைகளை உடனடியாகத் திருத்த வேண்டியதே.

என்னென்ன திருத்தங்களை, எங்கெங்கே, எவ்விதத்தில் செய்ய வேண்டும் என்கிறபோதுதான் பலவேறு கருத்துக்களைக் காண்கிறோம்.

நம் நாட்டின் பிரத்தியேக நிலைமையை ஒட்டிக் கல்வித் துறையில் சில அம்சங்களுக்கு முதலிடம் தந்தாக வேண்டும். உயர்தரப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும், தொழிற் கல்வி நிலையங்களிலும் மாணவர்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதற்கு அத்தியாவசியத் தேவை எதுவும் இப்போது இல்லை. எண்ணிக்கையைப் பெருக்குவதைவிட, இப்போதுள்ள கல்வி நிலையங்களைக் கட்டுக்கோப்பாக உருவாக்கி, படிப்பின் தரத்தை உயர்த்துவதற்கே முயற்சி எடுத்தல் அவசியம்.

கல்வியின் உண்மையான பயனாக ஒழுக்கத்தையே கருதவேண்டும். இந்தியாவில் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் ஒழுக்கக் குலைவு சர்வ வியாபகமாகி விட்டிருக்கிறது. ஒழுக்கச் சிதைவு மாணவர்களை மட்டும் பிடிக்கவில்லை. ஆசிரியர்களும் தங்களது உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ளத் தொழிற் சங்கக்காரர்களைப்போல் வேலை நிறுத்தம், ஆர்ப்பாட்டம் இவற்றில் முனைந்து நிற்கிறார்கள். இப்போதே ஒழுக்கக் குறைவு பெரிதாக வளர இடம் தந்துவிட்டோம். கட்டுப்பாட்டைக் கொண்டு வருவது சிரமசாத்தியம்தான். ஆயினும் பொறுமையுடன் சாத்விக முறையில் ஒழுக்கத்தை நிலை நிறுத்துவதற்கான முயற்சிகளை மேற்கொண்டே ஆக வேண்டும். ஒவ்வொரு சர்வ கலா சாலையிலும் பின்பற்ற வேண்டிய நன்நடத்தை முறைகளை வகுத்து, அவற்றுக்காக மாணவர் சங்கங்களை அமைக்க வேண்டும். மாணவர்களின் குறைகளைக் கேட்டுப் பரிகாரம் காண ஓர் அமைப்பினை நிறுவ வேண்டும். கட்சி அரசியலில் பங்கு பெறுவது, கட்டுப்பாட்டுக்கு அடங்காத ஆர்ப்பாட்டம், வன்முறை இவற்றை அடியோடு தடை செய்ய வேண்டும். அவசியமாயின் மாணவர்களையே கொண்ட ஒரு விசேஷ போலீஸ் படையோ அல்லது பட்டதாரிகளைக் கொண்ட தனிப் போலீஸ் பிரிவோ அமைக்கப்படலாம். சொந்த நலனுக்காக மாணவர் கோஷ்டிகளைத் தூண்டி ஒழுக்கக் குலைவை ஊக்குவிக்கும் ஆசிரியர்கள் விஷயத்தில் மிகக் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும். அதே சமயத்தில் ஆரம்பப் பள்ளி ஆசிரியரிலிருந்து, கல்லூரிப் பேராசிரியர் வரை அனைவருக்கும் போதிய ஊதியமும், இதர வசதிகளும் கிடைப்பது சமூகத்துக்கே நலம் தருவதாகும் என்பதையும் உணர்ந்து செயலாற்ற வேண்டும். ஒவ்வொரு கல்லூரிக்கும் ஓர் ஆசிரியர் காலனி ஏற்பட்டு, சம்பளத்தில் பத்துச் சதவிகித வாடகையில் ஆசிரியர்களுக்கு ஜாகை வசதி கிடைக்கச் செய்வது நல்லது. கல்வி போதித்தல் வெறும் கூலி விஷயமல்ல என்பதை ஆசிரியர்களுக்கு உணர்த்தி, அவர்கள் கலாசார வளர்ச்சிக்காகச் சிந்திக்கவும், எழுதவும், பேசவும் ஊக்கம் தர வேண்டும்.

ஒழுக்கத்துக்கு அடுத்தபடியாக மொழிப் பிரச்னை உள்ளது. இந்தியா ஒரே நாடாக இருக்க வேண்டுமாயின், இந்நாட்டின் பல்வேறு துறையினரும் இந்நாட்டின் பல்வேறு பிரதேசத்தினரும் ஒன்று கலந்து செயலாற்ற வேண்டுமாயின், அவர்கள் அனைவரும் அறிந்திருக்க வேண்டிய ஒரு பொது மொழி இருக்க வேண்டும். இப்போது சில சர்வ கலாசாலைகளில் பிரதேச மொழியே போதனா மொழியாக்கப்பட்டுள்ளது. ஹிந்தி மாநிலங்களில் ஆங்கில மொழியறிவுக்கு முக்கியத்துவம் இல்லை. இவ்விதம் தேசத்தின் படிப்பாளிகள் பல்

வேறு மொழிகளில் பயின்று, ஐக்கியப் பட முடியாமல் இருந்தால் பிற்பாடு தேசிய முக்கியத்வம் பொருந்திய எல்லாத் துறைகளிலும் குழப்பத்தையும், திறமைக் குறைவையுமே காண வேண்டியதாகும். மேற்படிப்பு நிருவாகம் இவற்றுக்கு ஒரு மொழி அல்லது இரு மொழிகளை நாடெங்கும் கட்டாயமாக்கு நிலையன்றி விமோசனம் இல்லை. இவ் விதம் முடிவெடுப்பது பார்லிமெண்டுக்கு மிகவும் கஷ்டமான கசப்பான காரியம் தான். ஆயினும் இத்திசையில் திட்ட வட்டமான, நிரந்தரமான முடிவு எடுக்கப்பட்டேயாக வேண்டும். ஆங்கிலம், ஹிந்தி இரண்டையும் கட்டாயமாக்கலாம் எனில், தமிழகம் கட்டாய ஹிந்தியை ஏற்கிற சாத்தியக்கூறு இல்லை. மற்ற மாநிலங்களும் கூட உயர் மட்டங்களில் பயனுள்ள முறையில் பழகிக்கொள்கிற அளவுக்கு ஹிந்தி வளர்ந்திருக்கிறதா என்பது சந்தேகமே. ஆங்கில மொழி ஒன்றுதான் சகல விஷயங்களுக்கும் முற்றிலும் ஏற்றதாக உள்ளது. எனவே ஹிந்தி மாநிலங்கள் உட்படத் தேசம் முழுவதிலும் ஆங்கிலத்தையே உயர் படிப்புக்குப் போதனை மொழி ஆக்குவதுதான் யுக்தமாகத் தெரிகிறது. கூட்டுப் போதனை மொழியாகத் தாய் மொழியையும் வைத்துக் கொள்வதை ஆட்சேபிப்பதற்கில்லை. இவற்றோடு ஹிந்தி மொழி அறிவையும் வளர்ப்பது வரவேற்கத் தக்கது.

பாரதக் குடியரசு பிறந்ததிலிருந்து பத்தாண்டுகளுக்குள், இந்நாட்டின் பதினான்கு வயது வரையுள்ள பாலர் அனைவருக்கும் கட்டாயமாக இலவசக் கல்வி வழங்க வேண்டும் என்று நம் அரசியல் நிர்ணய சாஸனம் விதித்தது. ஆனால் குடியரசு உதயத்துக்குப் பின் 23 ஆண்டுகள் முடிந்த பின்பும் இந்த லட்சியம் நிறைவேறவில்லை. உயர்பள்ளி, கல்லூரிப் படிப்பை விஸ்தரிப்பதை இப்போது நிறுத்திக் கொண்டு, சகல மக்களுக்கும் ஆரம்பக் கல்வியைப் பரப்புவதிலேயே திட்டக் குழுவினர் கவனம் செலுத்துவது பொருத்தமாக இருக்கும். பள்ளிக் கட்டிடங்களையும் சுற்றுப்புறங்களையும் குழந்தைகளுக்குக் கவர்ச்சிகரமாக்க வேண்டும்; அவர்களுக்கு மதிய உணவு, சீருடை யெல்லாம் மாநில சர்க்கார் மூலம் வழங்க வேண்டும். இதற்குத் தற்போது ஐந்தாவது திட்டத்தில் கல்விக்கு ஒதுக்கியுள்ளதை விட அதிகமான தொகை செலவிட வேண்டியிருக்கும். மத்திய - மாநில பட்ஜெட்டுகளைச் சரிக் கட்டுவதற்காகக் கல்விக்குரிய நிதியத்தைக் குறைத்து ஒதுக்கீடு செய்வது தவறாகும். இந்த இனத்தை வருடாந்தர பட்ஜெட்டிலிருந்து பிரித்து, தனிப்பட்ட அடிப்படையில் நிதியம் வழங்க வேண்டும். அதாவது கல்விக்கென்றே ஒரு மாநிலத்தின் மொத்த வருமானத்தில் இருபத்தைந்து சத விகிதத்தையும், மத்திய சர்க்கார் வருமானத்தில் 15 சத விகிதத்தையும் ஒதுக்கலாம்.

கல்விக்கூடங்களில் ஒழுக்கத்தோடு கட்டுப்பாடு, உயர்தரக் கல்விக்கு ஒரு பொது மொழி, கவர்ச்சிகரமான கட்டாய ஆரம்பக் கல்வி, கல்விக்கு ஸ்திரமான நிதி ஏற்பாடு இந்நான்கும் கல்விக்கு இன்றியமையாதவை.

நீங்க வைச்சிருக்கிற மாதிரிதானே நானும் ஒரு பூனைக்குட்டி வைச்சிருக்கேன்!

சரியாப் பாருங்க! உங்க கிட்டே இருப்பது அண்ணா - வால் கூட்டில் அடைக்கப்பட்ட புலியின் குட்டி போல் தெரியுதண்ணேன்!

திராவிட நாடு பிரிவினைப் போராட்டம்

மாநில சுயாட்சி

ராஜ்ய அரசுக்கு அதிக அதிகாரங்கள்

காமராஜ்

ஐயோ! என்னை வெட்டக் கோடாலியைத் தீட்டறானே... தெரியலையா?




அருமையான பசு அண்ணே நிறையக் கறக்குது!



இருக்கும். இதன் விளைவாக மக்களிடை ஏற்படக்கூடிய அதிருப்தியை அளவிட முடியாது; பல இடங்களில் சட்டமும் ஒழுங்குக் கட்டுப்பாடும் தகர்ந்து போகிற நிலைகூட ஏற்படலாம். எனவே, அரிசியை முக்கிய உணவாகக் கொண்டுள்ள தமிழ்நாடு முதலிய மாநில சர்க்கார்கள் அரிசி விலையை ஒழுங்கு படுத்துவதோடும், ஏழைகளின் விநியோகத்துக்கென சுதந்திரச் சந்தையிலிருந்து ஒரு பங்கை மட்டும் தானே வாங்கி நியாய விலைக் கடைகள், கூட்டுறவுச் சங்கங்கள் ஆகியவை மூலம் விற்பதோடும் நிற்க வேண்டும். விவசாயிகளிடமிருந்து இன்ன விலைக்குக் குறைவாக அரிசி வாங்கக்கூடாது என்று குறைந்த பட்ச விலை நிர்ணயிக்க வேண்டும். சில்லறை வியாபாரிகள் குறிப்பிட்ட விலைக்கு அதிகமாக அரிசி விற்கக் கூடாது என்று அதிக பட்ச விலையும் நிர்ணயிக்க வேண்டும். அனைவரும் அறியும்படி இவ்விலைகளைப் பிரகடனப் படுத்துவது அவசியம். குறைந்த பட்சத்துக்குக் குறைவாக விவசாயிக்குக் கொடுப்பதும், அதிகபட்சத்துக்கு அதிகமாக வியாபாரி விற்பதும் சட்டப்படி குற்றமாக்கப்படலாம். இந்த நடவடிக்கைகளை மேற்கொண்டால் இன்றைய உணவுச் சிக்கலை வெற்றிகரமாகச் சமாளிக்க இயலும். வருகிற வருடத்தில் நல்ல விளைச்சல் இருக்குமாயின், மேற்சொன்ன நடவடிக்கைகளையும் முடிந்த மட்டும் தளர்த்தி விடலாம். நம் தேசத்தில் அரசாங்கமே உணவு தானிய வர்த்தகத்தில் ஏகபோக வியாபாரத்தை மேற்கொள்வது முற்றிலும் பைத்தியக்காரத்தனமே ஆகும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## அந்த முதல்வரே இந்தப் பேச்சையும் பேசுகிறார்

திண்டுக்கல் தேர்தலில் இரு பிரிவுக் கம்யூனிஸ்டுகளும் தம்முடைய எதிரியின் பக்கம் என்று முடிவானதும், ''கம்யூனிஸ்டுகளை அழிப்பதே என் முதல் வேலை. அவர்கள் என் விரோதிகள்'' என்பதுபோலெல்லாம் கருத்துப்படப் பேசிய தி.மு.க. முதல்வர் திரு கருணாநிதி இப்போது ஜூலை முதல் வாரம் தமிழக வலது கம்யூனிஸ்டுக் கட்சி மேலும் இரண்டு பிரிவாக உடைந்தவுடன், மணலி கோஷ்டியினருக்கு வலைவீசி அழைப்பு விடுக்கிறார்.

''தி. மு. க.வின் கொள்கைகளை ஏற்றுக் கொண்டு இதில் சேருவதற்கு விரும்பினால் அவர்கள் கம்யூனிஸ்டுக் கட்சியிலிருந்து வந்தவர்கள் என்றாலும் அவர்களைக் கழகத்தில் சேர்த்துக் கொள்ளத் தயார். தற்போது இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியிலிருந்து வந்திருப்பவர்கள் தி.மு.க.வில் சேர வேண்டும் என்ற எண்ணம் எதையும் இதுவரை வெளியிடவில்லை என்றாலும் அவர்கள் தி.மு.க.வில் சேர விரும்பினால் அது குறித்துப் பரிசீலனை செய்யப்படும்'' என்று திரு கருணாநிதி கூறியிருப்பது இன்று யார் வந்தாலும் சேர்த்துக் கொள்கிற நிலைக்குத் தி.மு.க. இருப்பதையே காட்டுகிறது.

## பொதுத்துறையில் லாபம்

பொதுத் துறை நிறுவனங்கள் பெரும்பாலும் நஷ்டத்தில் நடப்பதே நடைமுறையாக இருப்பினும் இப்போது அவற்றில் லாபம் வந்தால்தான் காலம் தள்ள முடியும் என்கிற அளவு பொருளாதார நெருக்கடி நாட்டில் தோன்றிவிட்டது. அந்த ஆசையை மத்திய கனரகத் துறை மந்திரியே திருச்சிக்கு அருகில் உள்ள திருவெறும்பூர் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல் தொழிற்சாலையில் ஜூலை முதல் வாரம் அந்தத் தொழிற்கூடத்தின் பத்தாவது ஆண்டுவிழாக் கூட்டத்தில் தெரிவித்திருக்கிறார்.

''நம்மிடம் உள்ள பதினேழு அரசுத்துறை நிறுவனங்களில் திருச்சி, போபால் நகரங்களில் உள்ள ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் ஆலைகளும், பெங்களூர் எச். எம். டி., துங்கபத்ரா ஸ்டீல்ஸ் ஆகியவையுமாக உள்ள நாலே நிறுவனங்கள்தாம் லாபத்தில் நடக்கின்றன. இதுவரை லாபமே காட்டாமல் இருக்கும் பொதுத்துறை நிறுவனங்கள் இனி மேல் குறைந்தபட்சம் பத்து சதவிகித லாபமாவது காட்ட வேண்டும் என்பது அரசின் நோக்கம். பொதுத்துறை நிறுவனங்கள் நாட்டிலுள்ள வறுமையை ஒழிக்கும் வகையில் பொருளாதார வளர்ச்சிக்கு உதவ வேண்டும்'' என்று திரு டி. ஏ. பை ஆசைப்படுகிறார். போகட்டும், இப்படி ஒரு நல்ல ஆசையாவது பட முடிந்திருக்கிற வகையில் அவரைப் பாராட்டலாம்.

## கேலிக் கூத்து

கடந்த சில மாதங்களாகக் கிருஷ்ணராயபுரம் எம்.எல்.ஏ. சவுந்தர பாண்டியன் என்பவர் பற்றி 'இன்று மீண்டும் தி.மு.க.வில் சேர்ந்தார்' என ஒரு நாளும் 'இன்று மீண்டும் அ.தி.மு.க.வுக்கே போய்விட்டார்' என மறு நாளும் பத்திரிகைகளில் மாற்றி மாற்றிச் செய்தி வரும். அதனால் அவர் என்று எந்த விநாடியில் எந்தக் கட்சியில் இருக்கிறார் என்பதே பத்திரிகைகளுக்கும் பொதுமக்களுக்கும் தெரியாமல் திணற வேண்டியிருக்கும். அவ்வளவு வேகமானவை அவரது மாற்றங்கள்.

இப்போது அதே வழியில் கன்யாகுமரித் தொகுதி எம்.எல்.ஏ. திரு ராஜாப்பிள்ளையும் போயிருக்கிறார். அவர் தி.மு.க.விலிருந்து அ.தி.மு.க.வுக்கு மாறியதாகப் பத்திரிகையில் செய்தி வந்த இரண்டு நாட்களில் மறுபடி

மான மாநில சுயாட்சி 'பார் விளையாட்டை'ப் புதுவிதமானதும் புரியாததுமான கோஷங்களோடு நடத்திக் காட்டியிருக்கிறார் திரு கருணாநிதி. கொஞ்சம் குழப்பவும் செய்திருக்கிறார்.

''இந்திய நாடு இந்தியருக்கே. தமிழ் நாடு தமிழருக்கே. இங்கே தமிழ் நாட்டில் இருக்கிற ஆந்திரர், மலையாளிகள், கன்னடக்காரர்கள், வேறு மொழிக்காரர்கள் எல்லோருடைய உரிமையையும் பாதுகாத்துச் சிறுபான்மையினருடைய மொழிகளுக்கும் பாதுகாப்பு அளித்துத் தமிழர் தலைமையில் தமிழராட்சி தான் தமிழ் நாட்டில் நடைபெறும். 'தமிழ் நாடு தமிழருக்கே' என்றால் பிரிந்து போகிற தமிழ் நாடு அல்ல. இதை யாரும் திரித்துச் செய்தி போட வேண்டாம்'' என்று விழுப்புரத்தில் பேசியிருக்கிறார் முதல்வர். வேறு யாரும் குழப்பியோ, திரித்தோ செய்தி பிரசுரித்துத் தான் இந்தப் பேச்சைப் புரிய வைக்காமல் அடித்துவிட முடியுமா, என்ன? போதுமான குழப்பம் பேச்சிலேயே உண்டே.

'இந்திய நாடு இந்தியருக்கே. தமிழ் நாடு தமிழருக்கே' என்ற கோஷமே குழப்பமாகத் தானே இருக்கிறது? 'குவிட் இண்டியா' போராட்டம் நடந்த காலத்துக்கும் சேர்த்தல்லவா இப்போது கோஷங்களைத் தயாரித்துக் கொடுக்கிறார் திரு கருணாநிதி. இப்போதே இந்திய நாடு இந்தியரிடமும், தமிழ் நாடு தமிழரிடமும்தானே இருக்கிறது. தமிழ் நாட்டை யார் போராடிக் கைப்பற்றிச் சட்டைப் பையில் வைத்து எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள்? ஏன் இந்த நிழற் சண்டை?

## ஐந்தரை ரூபாய்க்கு ஒரு படி அரிசி

சுமார் பதினான்கு லட்சம் மக்களைக் கொண்ட கன்யாகுமரி மாவட்டத்தில் கடுமையான அரிசிப் பஞ்சத்தின் காரணமாக ஒரு படி அரிசி விலை ரூ. 4–50, ரூ. 5–50 என்று படிப்படியாக ஏறி மக்கள் நெருங்க முடியாத எல்லைக்குப் போய்விட்டது. இதற்குமுன்பு எந்தக் காலத்திலும் இப்படி ஒரு பயங்கர நிலைமை உருவானதில்லை என்கிற அளவுக்கு இன்று கன்யாகுமரியில் அரிசி நெருக்கடி ஏற்பட்டுவிட்டிருக்கிறது.

கன்யாகுமரி மாவட்டத்தையும் தமிழ் நாட்டையும் இணைக்கும் 'காவல் கிணறு' என்னும் இடத்தில் தடுப்பு நிலையம் வைத்துத் தமிழகத்தின் இதர பகுதிகளிலிருந்து குமரி மாவட்டத்தைத் தனியாக்கி வேறு பகுதிகளிலிருந்து அரிசி, நெல், எதுவும் அங்கு வரமுடியாமல் தடை செய்த பின்பே இப்படி ஒரு விளைவு ஏற்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. அரிசிப் பஞ்சத்தை எதிர்த்துக் குமரி மாவட்ட மக்கள் சர்வ கட்சிக் கூட்டம் போட்டு 'நெருக்கடி நிலைமை தீராவிட்டால் நேரடி நடவடிக்கையில்கூட இறங்குவது' என்று முடிவு செய்து விட்டார்கள்.

## ராஜாஜி சிந்தனை

வாழை மரம் ஒன்றைப் பாருங்கள். அதன் வடிவம் வேர் முதல் நுனி வரையில் எவ்வளவு அமைப்பாக அமைந்திருக்கிறது! அகன்ற பச்சை இலைகள், தளதளவென்று உயிரொளியோடு மின்னும் தண்டு மரம். நுனியில் பாதி மூடியும் பாதி திறந்ததுமாக எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கிற புதிய குருத்து. அடியில் பட்டுப் போல், அழகாய்ப் பழுப்பேறின பட்டை. 'என் வேலை முடிந்தது. வளரும் செடியின் வளர்ச்சிக்குக் காப்பாகக் கீழே கிடக்கிறேன், தடையாக நிற்க மாட்டேன்' என்று வாய் திறந்து பேசுவது போல் இருக்கிறது. உயிர் படைத்த ஒரு ஜன சமூகத்தின் பண்பாட்டுக்கு வாழை மரம் பொருத்தமான உபமானம்.



வாழ்க்கையில் உள்ளதை உள்ளபடி சித்திரிப்பது தான் இலக்கிய முறை. ஆனாலும் வாழ்க்கையில் மேன்மையும் உண்டு, சிறுமையும் உண்டு. அழகும் உண்டு, அவலட்சணமும் உண்டு. பயன்படுவதும் உண்டு, பயனற்றதும் உண்டு. பொறுக்கி எடுத்துக் கொள்வதில்தான் எழுத்தாளர்களின் கலைத் திறமை நிற்கிறது. கலையில் உண்மை இருக்க வேண்டும். உண்மையின்றிக் கலையில்லை. ஆனால் உண்மையெல்லாம் கலையாகி விடாது. நிகழ்ச்சிகளையும் சம்பாஷணைகளையும் பதிவு செய்துவிட்டால் இலக்கியமாகி விடாது. எது கலைக்கு உதவும் என்பதைக் கண்டு அதைத் தனிப்படுத்தி இலக்கிய உருவத்தைத் தந்தால் அது கலையாகும்.

'அரிசி சம்பந்தமான எந்தப் போராட்டத்தையும் அரசு சகித்துக் கொள்ளாது' என்பது போல் தமிழக முதல்வர் கூறியிருக்கிறார். இவ்வளவு ரோஷமுள்ள அரசு அந்த மாவட்ட மக்களின் அரிசிப் பஞ்சத்தைப் போக்கிவிட்டு அல்லவா இப்படிப் பேச வேண்டும்? சகிப்புத் தன்மை என்பது ஒரு வழிப் பாதை அல்லவே? கன்யாகுமரி மாவட்டம் அரசியல் ரீதியாகத் தி.மு.க.வுக்கு அதிக ஆதரவு இல்லாத மாவட்டம் என்பதால்தான் இப்படிச் செய்கிறார்களோ என்பதாகக்கூடப் பரவலாக ஒரு வதந்தி நிலவி வருகிறது. 'போராடினால் இந்த அரசு பார்த்துக் கொண்டிராது' என்பது போலெல்லாம் எச்சரிக்கை விடுத்துக் கொண்டிருக்காமல் போராட்டத்துக்குக் காரணமான குறைகளைத் தவிர்க்க முயல்வதே விவேகம்.

## பெரிய குப்பம் முடியவில்லை

பெரிய குப்பம் சம்பவங்கள் சம்பந்தமாக விசாரணைகள் நடந்து கொண்டிருக்கும் போதே மேலும் ஓர் அசம்பாவிதம் நடந்து விட்டது. பெரிய குப்பத்தில் முப்பத்திரண்டு குடிசைகள் தீ வைத்துக் கொளுத்தப்பட்டிருக்கின்றன. இந்தத் தீ விபத்தில் ஒரு குழந்தை தீயில் அகப்பட்டு எரியுண்டதாகவும் தெரிகிறது.

தி.மு.க. ஆதரவாளர்கள் என்று சந்தேகிக்கப்பட்ட பத்து பேர் பெரிய குப்பம் வாசிகளின் ஜாதிப் பஞ்சாயத்துக் கூடுகிற இடத்துக்கு அவர்களை அழைத்து விசாரணைக் கமிஷனுக்கு முன்னால் உள்ள வழக்கை வாபஸ் பெறச் சொல்லி வற்புறுத்தியதாகவும், கிராமவாசிகள், ''அதெல்லாம் எங்கள் வசமுள்ள விவகாரமில்லை'' என்று மறுத்தவுடன் குடிசைகளுக்கு உடனே தீ மூட்டியதாகவும் பெரிய குப்பம் மக்களுக்காக ஆஜராகும் வக்கீல் திரு கணேசனுக்குத் தகவல் கிடைத்திருக்கிறதாம்.

ஒரு தவறுக்குப் பரிகாரம் கண்டு கொண்டிருக்கும் போதே இப்படி மேலும் மேலும் பல தவறுகள் நடக்குமானால் விமோசனமே இல்லை என்று ஆகிறது. பெரிய குப்பம் வாசிகள் என்ன பாவம் செய்தார்கள்? 1973ம் ஆண்டை அவர்கள் என்றென்றும் மறக்கவே முடியாதபடி அவ்வளவு கஷ்டங்களை அவர்கள் அனுபவித்து விட்டார்களே.

## இப்படியா கேட்பது?

1. ''சமீபத்தில் அமெரிக்கா சென்று திரும்பிய நடிகை யார்?''

2. ''(முதலமைச்சருக்கு) டாக்டர் பட்டம் எதற்காக வழங்கினார்கள்? எங்கு வழங்கினார்கள்?''

3. ''ஜூன் மூன்றாம் தேதிக்கு (கருணாநிதி பிறந்த நாள்) என்ன முக்கியத்துவம்?''

4. ''அமெரிக்காவிலேயே தங்கிவிட்ட தமிழ் நாட்டு நடிகையின் பெயர் தெரியுமா?''

5. ''குறுகிய கால நெல் ரகத்தின் பெயர் என்ன? (கருணா—8)''

6. ''லாரியின் ஸ்பேர் பார்ட்ஸ்கள் என்னென்ன?''

7. ''எந்த லாரியின் 'சாஸி' அதிகக் கனம் இழுக்கும் சக்தி கொண்டது?''

இவை எல்லாம் என்ன கேள்விகள் தெரியுமா? தமிழக மருத்துவக் கல்லூரிகளில் சேர்வதற்காக விண்ணப்பம் போட்டிருந்தவர்களுக்கு 'இன்டர்வ்யூ'வில் கேட்கப்பட்ட கேள்விகளில் சிலதான் இவை. ஒரு வேளை அமெரிக்கா சென்று திரும்பிய நடிகையையும், அமெரிக்காவிலேயே தங்கிவிட்ட நடிகையையும் பற்றித் தெரியாத மாணவருக்கு மருத்துவக் கல்லூரியில் இடம் கிடைக்காமல் போனாலும் போய்விடலாம். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் நாட்டின் தற்போதைய முதல்வருக்கு டாக்டர் பட்டம் கிடைத்தது பற்றியும், முதல்வரின் பிறந்த நாள் எந்தத் தேதியில் எந்த மாதத்தில் வருகிறது ஞாபகம் இல்லாத மாணவர்பாடும் திண்டாட்டமாகலாம். மருத்துவக் கல்லூரித் தேர்வா அல்லது ஏதாவது சினிமா சம்பந்தமான 'க்விஸ்' புரோகிராமா என்று சந்தேகமாக இருக்கிறது அல்லவா?

## கட்டுப்பாடும் ஒழுக்கமும்

தமிழ் மக்களும், பிரதம மந்திரி இந்திரா காந்தி, ஜனாதிபதி கிரி போன்றவர்களும், திரு காமராஜ் அவர்களின் எழுபத்தோராவது பிறந்த தினத்தில் அவரை வாழ்த்திப் பாராட்டியிருக்கும் இந்த நல்ல வேளையில் பள்ளிகளில் ஒழுக்கமும் கட்டுப்பாடும் வளர வேண்டும் என்று கூறி இளைஞர்களை வாழ்த்தியிருக்கிறார் திரு காமராஜ். சந்தர்ப்பத்துக்கு ஏற்ற பொருத்தமான வாழ்த்துரை இது:

''மாணவர்களிடையே ஒழுக்கம் குன்றி விட்டது. உண்மை, கட்டுப்பாடு, ஒழுக்கம் இவற்றைச் சிறு வயதிலேயே கற்றுக் கொடுப்பதற்கென்று தனியாக ஆசிரியர்கள் வேண்டும். கல்வி என்றால் சும்மா பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி வைத்துவிடுவது மட்டும்தான் என்று பெற்றோர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இன்று இளைய சமூகத்தில் ஒழுக்கம் பற்றிய அக்கறையே காணோம். ஒழுக்கம் தானே வந்துவிடாது. ஒழுக்கம் பழகினால்தான் வரும். ஒழுக்கம், கட்டுப்பாடு, மரியாதைப் பழக்கம் இவற்றையெல்லாம் குழந்தைகளுக்குச் சொல்லித் தர வேண்டும்'' என்று சென்னை மாநகராட்சியின் சார்பில் கட்டப்பட்டுள்ள புதிய பெண்கள் உயர்நிலைப் பள்ளி ஒன்றினைப் பெரம்பூர் அருகே திறந்து வைக்கும்போது பயனுள்ள அறிவுரையைக் கூறியிருக்கிறார் திரு காமராஜ்.

# மேஷமும் தனுசும் கூடினல் மங்களம் பொங்கிடும். லால்பாயின் சிவப்பு—ஊதா சேர்ந்தால் வளமை ஓங்கிடும்!

**லால்பூய்—அதிர்ஷ்டப் பொருத்தம் அளிப்போர்**

வண்ணங்களைப் போலவே ராசிகளுக்கும் பொருத்தம், இணக்கம் எல்லாம் உண்டு. பகட்டும் புத்தெழிலும் பொங்கிடும் லால்பாய் துணி வகைகளிலே உங்கள் அதிர்ஷ்ட வண்ணங்களை காணுங்கள்.

உங்கள் ராசிக்கும் சுவைக்கும் பொருந்தும் வண்ணத்தைத் தேர்ந்தெடுத்து அணியுங்கள். உங்கள் மனதுக்குப் பொருத்தமானவரை சந்திக்கவும் கூடும்; சகல சௌபாக்கியங்களும் கைகூடும்! தேர்ந்தெடுக்க 7 மடங்கு வகைகள் வேறு எங்குதான் கிடைக்கும்?



உங்கள் அதிர்ஷ்டச் சின்னத்தை அணியுங்கள்.



லால்பாய் குரூப் துணிகள்

ஆனந்த
அசோகா
ராய்பூர்
சரஸ்பூர்
அருண்
நூதன்
நியூ காட்டன்

ஏழு மில்களின் ஏற்றமிகு துணிகள்

CHLB-24-203 TM

சில்லறை விற்பனையாளர்கள்:

M/s. வெங்கடேஷ், 243, 244, என்.எஸ்.ஸி. போஸ் ரோடு, சென்னை-1
M/s. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8
M/s. ஈஸ்வரீஸ், 26-பி, மேற்கு டவர் தெரு, மதுரை.1

# தொழிலதிபர்களே!

மாதந்தோறும் உங்களுடைய ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுக்கும்போது பின்வரும் விஷயங்களைக் கவனியுங்கள் :

1. இதர ஆதாயங்கள் உள்பட ஒரு ஊழியரின் சம்பளம் ஆண்டொன்றுக்கு 5,000 ரூபாய்க்கு அதிகமாக இருக்கக் கூடுமெனில், அவருக்குச் சம்பளம் கொடுக்கும்போது சரியான வரித் தொகையை கழித்துக் கொள்ள வேண்டும்.

2. அவ்விதம் கழித்துக் கொள்ளப்பட்ட வரித் தொகையை மத்திய அரசின் கணக்கில் ஒரு வாரத்திற்குள் செலுத்தி விட வேண்டும்.

தயவுசெய்து சட்டப்படி நடந்து கொள்ளுங்கள். அபராத வட்டி, தண்டனை, வழக்கு இவற்றை நீங்கள் தவிர்க்கலாம்.

மேலும் தகவல் அறிய மதிப்பீடு செய்யும் உங்கள் வருமான வரி அதிகாரியையோ, வருமான வரி இலாகா பொதுஜனத் தொடர்பு அதிகாரியையோ அணுகுங்கள்.

வெளியிட்டது :

டைரக்டரேட் ஆஃப் இன்ஸ்பெக்ஷன்
( ஆய்வு, புள்ளி விவர, வெளியீட்டுப் பிரிவு )
மயூர் பவன், கன்னாட் சர்க்கஸ்
புது தில்லி

davp 73/168



# வைதிகமும் தமிழும்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

கரிகால சோழனின் சாஸனம் ஒன்று இருக்கிறது. அது நல்ல ஸம்ஸ்கிருத பாஷையில் அமைந்திருக்கிறது.

யாத்ராகலித வேதானாம் சாஸ்த்ர
மார்க்கானுஸாரிணாம் !
ததேது அரிகாலஸ்ய கரிகாலஸ்ய சாஸனம் !!

கரிகாலன் இதில் தன்னை 'அரிகாலனாகிய கரிகாலன்' என்கிறான். 'அரி' என்றால் விரோதி என்று அர்த்தம். விரோதிகளுக்கு யமனாக இருக்கிற வீராதி வீரன்தான் 'அரிகாலன்'. சரி, கரிகாலனுடைய விரோதிகள் யார்? வேத சாஸ்திர மார்க்கத்தை அநுசரிக்காதவர்கள் அனைவரும் அவனுடைய விரோதிகள். வேத சாஸ்திர வழியில் செல்கிறவர்களை ரக்ஷிக்க வேண்டும், மற்றவர்களைத் தண்டித்து சிக்ஷிக்க வேண்டும் என்பதே கரிகாலனின் சாஸனம்.

வைதிக மதத்தைப் பிரசித்திபெற்ற நம்முடைய தமிழ் மன்னர்கள் மனமார வளர்த்தார்கள் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு. 'பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்றே ஒரு சங்ககால அரசனுக்குப் பெயர் இருக்கிறது. பிற்காலத்திலும் கல்வெட்டுக்களில் எங்கு பார்த்தாலும் தமிழரசர்கள் வேதவித்துக்களுக்கு வரியில்லாத 'இறையிலி'யாக நிலத்தை சாஸனம் செய்தது தெரிகிறது. நான்மறைகளின் வளர்ச்சிக்காகவே தானமாக வழங்கப்பட்ட பல கிராமங்கள் 'சதுர்வேதி மங்கலம்' என்ற பெயரில் உள்ளன.

வெளிதேசத்து விஷயம் ஒன்று புதிதாக நம் ஊருக்கு வந்தால் அதற்கு உள்ளூர் பாஷையில் வார்த்தையிருப்பதில்லை. வெளிநாட்டிலிருந்து நம் தேசத்துக்கு வந்த ரேடியோ, டெலிபோன், பஸ் முதலியவற்றுக்கெல்லாம் நம் பாஷையில் வார்த்தையில்லை. பிற்பாடு இப்போது இவற்றுக்கும் ஏதேதோ புரியாத தமிழில் வார்த்தைகளை உண்டாக்கிக் கொண்டிருக்கிறோம்.

வேதம், யாகம் முதலியன சிலர் சொல்கிற மாதிரி தமிழ் நாட்டின் ஆதி நாகரிகத்துக்குப் புறம்பாகப் பிற்பாடு வந்தவை என்றால், 'யாகம், வேதம்' முதலிய பதங்களுக்குச் சரியான தமிழ் வார்த்தை இருக்க முடியாது. ஆனால் மிக மிகப் பழைய தமிழ் இலக்கியங்களிலேயே 'வேதம்' என்பது 'மறை' என்றும், 'யாகம்' என்பது 'வேள்வி' என்றும் புகழ்ந்து பேசப்படுகின்றன. இவை மிகவும் அர்த்த புஷ்டி நிறைந்த பதங்கள் என்பதை ஸம்ஸ்கிருத பண்டிதர்கள், தமிழ்த் தலைவர்கள் இருவருமே ஒப்புக் கொள்வார்கள். அதே வைதிகப் பண்பாடும், யக்ஞ அநுஷ்டானமும் தமிழ் நாட்டில் ஊறிப் போயிருந்தாலொழிய அந்த நாகரிகத்தைக் காட்ட இத்தனை அழகான சொந்த மொழி வார்த்தைகள் உண்டாகியிருக்க முடியாது.

வேதத்தின் ஆறு அங்கங்களுக்கு 'ஷடங்கங்கள்' என்று பெயர். அதிலிருந்துதான் மத ஸம்பந்தமான எந்தக் காரியத்தையும் 'சடங்கு' என்று சொல்கிற வழக்கம் வந்திருக்கிறது. வைதிக அநுஸரணையே தமிழ் நாட்டின் தொன்றுதொட்ட பழக்கம் என்பதற்கு இதெல்லாம் உதாரணங்கள்.

தமிழ் மறை என்று சொல்கிற குறள் முழுக்க முழுக்க வைதிகமானதே என்பது என் அபிப்பிராயம். வைதிக சமயத்தில் பித்ருக்களுக்குத்தான் முதலிடம். அப்புறம்தான் தேவ யக்ஞம். பித்ருக்களைக் குறித்த தர்ப்பணமும் திவசமும் செய்தபின்தான் தேவ பூஜை செய்ய வேண்டும். இதே வரிசையில் திருவள்ளுவரும் சொல்கிறார்:

தென்புலத்தார், தெய்வம், விருந்து ஒக்கல்
தான் என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை

பித்ருக்கள், தெய்வம், அதிதி, சுற்றத்தார்கள், தான் என்று ஐந்து பேரையும் போஷிக்க வேண்டும் என்கிறார். முதலில் பிதிருக்களான தென்புலத்தாரைச் சொல்லி, அப்புறம் தெய்வத்தைச் சொல்வது குறிப்பிடத்தக்கது. யமனுடைய திக்கான தெற்கில் பித்ருக்களின் ஆவி இருக்கும் என்கிற வைதிக நம்பிக்கையிலேயே, மூதாதைகளைத் 'தென்புலத்தார்' என்கிறார்.

இந்த ஐந்து பேருக்கும் பாகம் பிரித்துத் தருவது நாமாகச் செய்வது. இது தவிர ராஜ ஆக்ஞையாக விளைச்சலில் ஆறில் ஒரு பங்கு வரியாக எடுத்துக் கொள்ளப்பட்டது. மீதமுள்ள ஐந்து பங்கை மேலே சொன்னபடி ஐந்தாகப் பிரிக்க வேண்டும். தனக்கு என்று அதில் ஒரு பங்குதான் வைத்துக் கொள்ளப்படுகிறது. பிதிருக்களை உத்தேசித்துச் சிலருக்கு அன்னமாக ஒரு பங்கு போகும். கோயில்களுக்கு ஒரு பங்கு போகும். விருந்தாளிகளுக்கு ஒரு பங்கு போகும். வசதியற்ற உறவுக்காரர்களுக்கு ஒரு பங்கு போகும். பாக்கி ஒரு பங்குதான் ஒருத்தனின் சொந்தக் குடும்பத்துக்கு. வைதிகமும், வள்ளுவரும் விதிக்கிற இந்தத் தர்மத்தைவிடப் பெரிய சோஷலிஸம் எதுவும் இல்லை. தனக்கென்று மட்டும் வாழாமல் லோகோபகாரமாக வாழ்க்கை நடத்த வேண்டும் என்கிற தியாகம்தான் வைதிக மதத்தின் அஸ்திவாரம். திருவள்ளுவரும் அதைத்தான் சொல்கிறார்.

எனது குழந்தைப் பிராயத்தின் பல ஆண்டுகளை என் மாமாவுடன் வடதேசத்தில் கழித்தேன். அவர் ஒரு மாதா கோயிலை யொட்டிய நிலப்பரப்பின் நிர்வாக அலுவலகத்தில் இருந்தார். மிகவும் கஷ்டமான நாட்கள் அவை. எனக்கு நிறைய வேலைகள் இருக்கும். பூசைகள் ஏராளமாய்க் கிடைக்கும். விளையாடவோ வேடிக்கை பார்க்கவோ நேரம் கிடைப்பது அரிது. என் மாமா என்னிடம் ரொம்ப ரொம்பக் கண்டிப்புடன் நடந்து கொண்டதால், நழுவிச் சென்று தனிமையை நாடுவது ஒன்றுதான் எனக்கு மகிழ்ச்சியளித்த ஒரே விஷயமாக விளங்கியது. எப்போதாவது ஒரு மணி நேரம் அவகாசம் கிடைக்குமானால், நான் கானகத்துக்குள் நழுவி விடுவேன் அல்லது மாதா கோயிலையொட்டியிருந்த மயான பூமிக்குச் செல்வேன். சவ அடக்கமான இடங்களில் உள்ள சிலுவைக் குறிகளுக்கிடையில் யோசித்துக் கொண்டும் பகற் கனவு கண்டு கொண்டும் எனக்கு நானே உரக்கப் பேசிக் கொண்டும் நடமாடுவேன்.

க்ளிம்மா நதிக் கரையோரமாக அதியற்புதமான அழகுடைய பிரதேசம் ஒன்று மாதா கோயிலுக்குச் சொந்தமாயிருந்தது. க்ளிம்மா நதி அகலமானது; அதில் பரவலாக ஆங்காங்கே பாறைகள் கிடக்கும். இரவும் பகலும் நதியின் குரல் கேட்டுக் கொண்டேயிருக்கும். ஒரே நாளில் ஒரு வேளையில் க்ளிம்மா தெற்கு நோக்கியும் இன்னொரு வேளை வடக்கு நோக்கியும் பாயும். கடல் நீர் உட்புகுவதற்கும் பின்வாங்குவதற்கும் ஏற்ப இம்மாறுதல் நிகழும். எவ்வாறாயினும் நதியின் அமரகீதம் வளம்மிக்க மண்ணிலிருந்து ஜீவசக்தியை உறிஞ்சிக்கொண்டிருந்தன. ஒவ்வொரு கல்லறையையும் இறந்தவரின் நினைவாகப் பொறித்து வைக்கப்பட்ட ஒவ்வொரு கல்வெட்டையும் நான் அறிவேன். சிலுவைகள் பல புதிதாக் நடப்படுவதையும் நாளாவட்டத்தில் அவை சாய்வதையும் கடைசியில் புயல் வீசும் ஓர் இரவில் சரிந்து விழுவதையும் பார்த்திருக்கிறேன்.

கல்லறைகளின்மீது மலர்கள் இல்லாவிட்டாலும் மயான பூமி முழுதும் புல் செழித்திருந்தது. அது ரொம்பத் தடிமனாகவும் மிகவும் உயரமாகவும் வளர்ந்திருந்தது. பல சந்தர்ப்பங்களில் நான் அங்கே உட்கார்ந்து என் இடுப்பு வரை உயர்ந்திருக்கும் புல்லின் அடர்த்தியினூடே காற்று பெருமூச்சு விட்டுச் செல்வதைக் கேட்டுக் கொண்டிருப்பேன். இந்தத் துயரப் பெருமூச்சுக்கிடையில் பல சமயங்களில் வேறு ஓர் ஒலியும் கேட்கும். மாதாகோயில் கோபுரத்தின் உச்சியில் அமைந்துள்ள, காற்று வீசும் திசையைச் சுட்டும் கோழி வடிவம் திசை திரும்பும்போது எழும் சத்தம். துருப்பிடித்த இரும்பு ஒன்றோடொன்று உரசும்போது உருவாகும் ஓசை குற்றம் சாட்டுவது போல் மாதா கோயிலைச் சேர்ந்த நிலப்பரப்பு முழுவதும் கேட்கும்.

மாதா கோயிலைச் சேர்ந்த பணியாளர் வேலை செய்யும்போது நான் அடிக்கடி அவரிடம் பேசுவேன். அவர் ரொம்பக் கடுகடுப்பான பேர்வழி. புன்னகை புரிவதே அபூர்வம். ஆனால் என்னிடம் நட்புடன் பழகினார். தாம் வெட்டிக்கொண்டிருக்கும் சவக்குழியிலிருந்து மண்ணை எடுத்து வெளியே வீசியபடி அவர் நிற்கும்போது அவர் என்னை அடிக்கடி அங்கிருந்து போய்விடுமாறு எச்சரிப்பார். அப்போதெல்லாம் நீண்ட பிடியுடைய அவரது மண்வெட்டியில் ஒரு பெரிய தொடை எலும்போ அல்லது இளித்துக் கொண்டிருக்

# நார்வீஜியக் கதை

இடைவிடாமல் தொடர்ந்து ஒலிக்கும். கோடையானாலும் குளிரானாலும் எந்தத் திசையில் சென்றாலும் ஒரே மாதிரியான வேகத்துடன் பாயும்.

மாதாகோயிலும் மயான பூமியும் ஒரு குன்றின் மீது இருந்தன. ஒரு சிலுவையின் வடிவில் அமைந்த பழங்காலத்திய கட்டிடம். மயானபூமி கவனிப்பாரற்றுக் கிடந்தது. சவ அடக்கமான இடங்களில் மலர்ச் செண்டுகளைக் காண முடியாது. ஆனால் அப்பால் மதில் சுவருக்குப் பக்கத்தில் ராஸ்ப்பெரி புதர்கள் செழித்து வளர்ந்திருந்தன. சாறு மிகுந்த பெரிய பழங்களைக் கொண்டிருந்தன. கீழே

கும் ஒரு மண்டை ஓடோ காணப்படும். கல்லறைகளின்மீதாக நான் பல சந்தர்ப்பங்களில் எலும்புத் துண்டுகளைக் கண்டெடுத்திருக்கிறேன். அந்தப் பணியாளர் சொல்லிக் கொடுத்தது போல் நான் அவற்றை மீண்டும் பூமிக்கடியில் புதைக்க என்றுமே தவறியதில்லை. இது எனக்கு ரொம்பப் பழக்கமாகி விட்டதால், இறந்த மனிதர்களை ஞாபகப்படுத்தும் எலும்புத் துண்டுகளைப் பார்க்க நேர்ந்தால் எனக்கு அருவருப்பு ஏற்படுவதேயில்லை.

ஒரு நாள் நான் மயான பூமியில் ஒரு பல்லைக் கண்டெடுத்தேன். அது முன் பக்கத்

'பேய்களால்கூட நன்மை ஏற்படுவதுண்டு!' என இக் கதையில் சாதிக்கும் நட் ஹாம்ஸன், நார்வே நாட்டில் விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர். மாலுமியாக உலகம் முழுதும் சுற்றி வந்தவர். 'பசி' என்ற இவரது நாவல் இவருக்குப் பிரபல்யத்தைத் தேடித் தந்தது. நார்வே நாட்டைச் சேர்ந்த விவசாய, மீனவக் குடும்பங்களை வைத்து எழுதிய நாவல்கள் பல. ''மண்ணின் வளர்ச்சி'' என்ற நாவல் 1920ல் இவர் நோபல் பரிசு பெறக் காரணமாக இருந்தது.

உலக யுத்தத்தின்போது இவர் ஜெர்மானியர் பக்கம் அனுதாபம் கொண்டிருந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டார். யுத்தத்தின் முடிவில் நார்வே விடுதலை அடைந்தபிறகு தேசத் துரோகத்துக்காக விசாரணை செய்யப்பட்டார். வயதானவர் என்ற ஒரே காரணத்தால் பெருந் தொகையை அபராதமாக விதித்த தோடு விட்டு விட்டது நார்வே அரசு. இவரது அரசியல் நோக்கம் எப்படியாயினும் நார்வே மக்கள் 1952ல் காலமான இவரைத் தங்கள் நாட்டின் மிக முக்கியமான இலக்கியகர்த்தா என்ற அளவில் இன்னும் மதித்துப் போற்றுகிறார்கள்.



# ஒரு தோற்றம்

நட் ஹாம்ஸன்

துப் பல். உறுதியானது. பளிச்சென்று வெண்மையாய்இருந்தது. ஒரு காரணமும் இல்லாமல் அந்தப் பல்லை நான் பாக்கெட்டில் போட்டுக் கொண்டேன். அதை எதற்காகவாவது பயன் படுத்தலாம். ஒரு வேளை அதை ஏதாவது ஓர் அலங்கார வடிவமாகச் செதுக்க முயலலாம். மரத்தால் நான் செய்த பல அழகிய பொருட்களுள் ஒன்றில் அதைப் பதித்து வைக்கலாம். நான் அந்தப் பல்லை வீட்டுக்கு எடுத்துச் சென்றேன்.

அப்போது இலையுதிர் காலம். சீக்கிரமே இருள் கவிந்தது. இது, அது என்று சுமார் இரண்டு மணி நேரத்துக்கு எனக்குப் பல காரியங்கள் இருந்தன. அதன் பின் பல்லில் என் வேலையைத் தொடங்குவதற்குச் சமையலறைக்குள் சென்றேன். இதற்கிடையில் அரை வட்ட வடிவில் சந்திரோதயம் ஆகியிருந்தது.

சமையலறையில் விளக்கு இல்லை. நான் தனியே இருந்தேன். வண்டுகள் வரும் என்பதால் விளக்குகளை ஏற்ற நான் விரும்பவில்லை. ஆனால் அடுப்பில் நெருப்பைத் தகதகவென்று எரிய விட்டுவிட்டால் அதிலிருந்து கிடைக்கும் வெளிச்சமே போதுமானது. எனவே நான் விறகு கொண்டு வர வெளியே ஷெட்டுக்குப் போனேன்.

'ஷெட்' இருட்டில் ஆழ்ந்திருந்தது. விறகுக்காகத் துழாவிக் கொண்டிருக்கையில் யாரோ ஒரு விரலால் என் நெற்றியில் தட்டியது போன்ற உணர்வைப் பெற்றேன்.

நான் அவசரமாகத் திரும்பிப் பார்த்தேன். ஆனால் யாரையும் காணோம். இரு கரங்களையும் என்னைச் சுற்றி வீசினேன். யாரும் தட்டுப்படவில்லை. ''யார் அங்கே?'' என்று அழைத்துப் பார்த்தேன். பதில் ஏதும் கிடைக்கவில்லை.

நான் தொப்பி அணிந்திருக்கவில்லை. என் தலையில் தட்டப்பட்ட இடத்துக்கு என் கரத்தை உயர்த்தினேன். ஐஸ் போன்ற ஜில்லென்ற உணர்வு என்







உள்ளங்கைக்கு ஏற்பட்டதால் உடனே பிடியைத் தளர்த்தி விட்டேன். இது என்ன விநோதம் என்று நினைத்துக் கொண்டவனாய் மீண்டும் கேசத்தை நோக்கிக் கரத்தை உயர்த்தினேன். இப்போது ஜில்லிப்பு மறைந்து விட்டிருந்தது. 'கூரையிலிருந்து என் தலையில் விழுந்தது என்னவாயிருக்கும்?' என்று சிந்தித்தேன்.

கை நிறைய விறகுகளை எடுத்துக்கொண்டு சமையலறைக்குச் சென்றேன். அடுப்பை மூட்டினேன். வெளிச்சம் பெறக் காத்திருந்தேன். பிறகு பல்லையும் அதை ராவுவதற்கான அரத்தையும் எடுத்தேன்.

ஜன்னலைத் தட்டும் சத்தம் கேட்டது.

நான் நிமிர்ந்து பார்த்தேன். ஜன்னலுக்குப் பின்னால், முகம் கண்ணாடியோடு ஒட்டினாற் போலிருக்க ஒரு மனிதன் நின்று கொண்டிருந்தான். அவன் எனக்கு முற்றிலும்புதியவன். மாதா கோயிலை யொட்டினாற் போல் சுற்று வட்டாரத்திலுள்ள எல்லாரையும் எனக்குத் தெரியும் என்றாலும் இவன் யார் என்று புரியவில்லை எனக்கு. அவன் பெரிய சிவந்த தாடியுடையவனாய் விளங்கினான். கழுத்தைச் சுற்றிக் குளிருக்கு அடக்கமாகச் சிவப்பு நிறத்தில் நீண்ட வஸ்திரத்தையும் ஸௌவெஸ்டர் * தொப்பியையும் அணிந்திருந்தான்.

நான் அப்போது என்னைப் பார்க்கவில்லை. ஆனால் பின்னால் எனக்குத் தோன்றியது இதுதான்: ''அவன் தலை இருட்டினிடையில் எனக்கு எப்படி அவ்வளவு தெளிவாகத் தெரிந்தது? இது எப்படிச் சாத்தியம்? வீட்டின் அந்தப் பக்கத்தில் அரைச் சந்திரனின் ஒளிகூட விழாதே!'' ஆனால் பயங்கரமான ஒரு தெளிவுடன் என்னால் அந்த முகத்தைப் பார்க்க முடிந்தது. அது வெளிறிப்போய்க் கிட்டத்தட்ட வெண்மை நிறத்தில்

---

* மழை நீர் ஊடுருவ முடியாத, கழுத்து வரை நீண்ட பட்டைகளைக் கொண்ட தொப்பி.

இருந்தது. அதன் கண்கள் என்னையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தன.

ஒரு நிமிஷம் சென்றது. பிறகு அந்த மனிதன் புன்னகை புரிய ஆரம்பித்தான். காதால் கேட்கக் கூடிய கலகலப்பான சிரிப்பு அல்ல! வாய் அகலத் திறந்தது. கண்கள் முன் போலவே முறைத்துப் பார்த்தன. ஆனால் அம்மனிதன் புன்னகை செய்தான்.

என் கரத்தில் இருந்தனவற்றைக் கீழே நழுவ விட்டேன். தலை முதல் பாதம் வரை நடுங்கினேன். இளித்துக் கொண்டிருந்த முகத்தில் தெரிந்த கோரமான வாய்த் துவாரத்தில் பல் வரிசைக்கிடையில் ஓர் இடைவெளியைக் கண்டேன். ஒரு பல் குறைந்தது!

உட்கார்ந்தது உட்கார்ந்தபடி தாள முடியாத வேதனையுடன் என் முன்னே நான் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். இன்னொரு நிமிஷம் சென்றது. அந்த முகத்தின் நிறம் மாறத் தொடங்கியது. அது ஆழ்ந்த பச்சை நிறமாகவும் பிறகு ஆழ்ந்த சிவப்பு நிறமாகவும் மாறியது. ஆனால் புன்னகை மாறவில்லை; மறையவில்லை. நான் நினைவிழந்துவிடவில்லை. என்னால் என்னைச் சுற்றிலும் இருந்த எல்லாவற்றையும் உணர்ந்தறிய முடிந்தது. அடுப்பில் நெருப்பு மிகத் தெளிவாக எரிந்துகொண்டிருந்தது. எதிர்ப் பக்கத்துச் சுவரை ஒட்டினாற் போலிருந்த படிக்கட்டுகளில் அதன் ஒளி மங்கலாய் விழுந்தது. சுவருக்கு மறுபுறம் வேலைக்காரியின் அறையிலிருந்து கடிகாரத்தின் 'டிக் டிக்' ஒலிகூடக் கேட்டது. எல்லாமே எனக்கு மிகத் தெளிவாகத் தெரிந்தன. அம்மனிதன் அணிந்திருந்த தொப்பியின் மேல் பாகம் பழுப்புக் கலந்த கறுப்பு நிறத்தில் இருப்பதையும் அதன் விளிம்பு பச்சை நிறத்தில் இருப்பதையும் கூடக் கவனித்தேன்.

பிறகு அம்மனிதனின் தலை கண்ணாடியையொட்டினாற் போலவே கீழே இறங்கியது. மிக நிதானமாகக் கீழே இன்னும் கீழே இறங்கியது. கடைசியில் அவன் ஜன்னலுக்குக் கீழேயே சென்று விட்டான். அவன் பூமிக்குள் நழுவிச் சென்று விட்டாற் போல் தோன்றியது. அதற்கு மேல் அவனைப் பார்க்க முடியவில்லை.

எனக்கு ஏற்பட்ட பீதி பயங்கரமானது. நான் வெட வெடவென்று நடுங்க ஆரம்பித்தேன். பல்லைக் கண்டுபிடிப்பதற்காகத் தரைக்குச் சரிந்தேன். ஆனால் அதே சமயம் அந்த முகம் மீண்டும் தோன்றலாம் என்பதால் ஜன்னலிலிருந்து என் கண்களை நகர்த்த நான் துணியவில்லை.

பல்லைக் கண்டுபிடித்ததும் மயானத்துக்கு அதை உடனே திரும்பக் கொண்டு சென்றுவிடவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. ஆனால் தைரியம் வரவில்லை. தொடர்ந்து தனிமையில் அமர்ந்திருந்தேன். நகர முடியவில்லை. வெளியே முற்றத்தில் யாரோ நடக்கும் சத்தம் கேட்டது. வேலைக்காரிகளில் ஒருத்தி மரத்தாலான காலணிகள் சப்திக்க வருவதைப் பார்த்தேன். ஆனால் துணைக்கு அவளை அழைக்கவும் எனக்குப் பயம்! காலடி ஓசை என்னைத் தாண்டிச் சென்றுவிட்டது. ஒரு யுகமே சென்று மறைந்தது. அடுப்பில் நெருப்பு எரிந்து அணையத் தொடங்கியது. என்னைக் காப்பாற்றுவார் யாருமில்லை எனத் தோன்றியது.

அப்புறம் நான் பல்லைக் கடித்துக்கொண்டு எழுந்து நின்றேன். எந்த ஜன்னலருகில் அந்த மனிதன் நின்றானோ அதையே வெறித்துப் பார்த்துக் கொண்டு பின்னோக்கியே நடந்து சென்று கதவைத் திறந்து சமையலறையை விட்டு வெளியேறினேன். வெளி முற்றத்துக்கு வந்ததும் ஒரே ஓட்டமாக லாயத்துக்கு ஓடினேன். குதிரைகளைக் கவனிக்கும் பையன்களில் யாராவது ஒருவனைத் துணைக்கு அழைத்துக்கொண்டு மயான பூமிக்குச் செல்லலாம் என எண்ணம்.

ஆனால் லாயத்தில் பையன்கள் யாரும் இல்லை. இதற்கிடையில், வெளியே திறந்த வெளிக்கு வந்ததனால் நான் சற்றுத் துணிச்சல் அடைந்திருந்தேன். எனவே தனியாகவே மயானபூமிக்குச் செல்வதென்று முடிவு செய்தேன். மேலும் எனக்கேற்பட்ட அனுபவத்தை யாரிடமும் ரகசியமாகக் கூடச் சொல்ல நான் விரும்பவில்லை. அது எப்படியும் என் மாமாவுக்குத் தெரிந்து போகும். அவர் என்னை இரும்புப் பிடியில் சிக்க வைப்பார். கதையை முழுமையாகக் கூற வேண்டிய நிர்ப்பந்தத்துக்குள்ளாவேன். இதை யெல்லாம் தவிர்க்க விரும்பி நான் தனியாகக் குன்றின் மீது ஏறிச் சென்றேன். கைக்குட்டையில் பல்லைச் சுற்றி எடுத்துப் போனேன்.

மயான பூமியின் வெளி மதில் வாசலருகே நான் தயங்கி நின்றேன். அதற்கு மேல் என் துணிச்சல் என்னுடன் இருக்க மறுத்துவிட்டது. நதியின் அமரொலியைக் கேட்க முடிந்தது. மற்றப்படி நிசப்தம்தான். மயானத்தின் அந்த வாசலுக்குக் கதவு கிடையாது. ஒரு வளைவு மட்டும்தான் இருந்தது. அதன் வழியே உள்ளே நுழைந்து செல்ல வேண்டும். அந்த வளைவின் ஒரு பக்கத்தில் கவலையோடு நின்று கொண்டு உள்ளே தலையை ஜாக்கிரதையாக நீட்டி நான் முன்னேறலாமா என்று பார்த்தேன்.

அடுத்தாற்போல் நான் பாதையில் மண்டியிட்டுக் கிடக்கிற நிலைக்குச் சரிந்துவிட்டேன்! நுழை வாசலிலிருந்து சற்றுத் தூரத்தில் கல்லறைகளுக்கு இடையில் மாலுமிகளுக்குரிய அந்தத் தொப்பியை அணிந்த எனது மனிதன் நின்றான். அதே வெள்ளை முகம். அதை என்னை நோக்கித் திருப்பியபோது என்னை மயான பூமிக்குள் முன்னேறி வருமாறு சமிக்ஞை செய்தான்.

இதை நான் ஒரு கட்டளை என்று அர்த்தம் பண்ணிக்கொண்டேன். ஆனால் போகப் பயமாக இருந்தது. அங்கேயே அம்மனிதனைப் பார்த்தபடி நீண்டநேரம் கிடந்தேன். அவனைப் பிரார்த்தித்தேன். ஆனால் அவன் அங்கேயே மௌனமாய் நின்றான்.

அப்போது எனக்குக் கொஞ்சம் தைரியம் அளிக்கும் ஒரு விஷயம் நடந்தது. விளைந்த தானியங்களைக் குவித்து வைக்கும் குடிலின் முன்புறத்தில் குதிரை லாயப் பையன் ஒருவன் ஏதோ காரியமாக நடமாடுவது கேட்டது. என்னைச் சுற்றிலும் உயிர் நடமாட்டம் இருந்ததன் அறிகுறி என்னை எழச் செய்தது.

அம்மனிதன் மெல்ல நகர ஆரம்பித்தான். அவன் நடக்கவில்லை. என்னை முன்னேறி வரு

மாறு விடாமல் ஜாடை காட்டியபடியே கல்லறைகள் மீதாக மிதந்து சென்றான். நான் வாசலைத் தாண்டி உள்ளே சென்றேன். அம்மனிதன் இன்னும் அருகில் வருமாறு ஜாடை காட்டினான். நான் சில அடிகள் எடுத்து வைத்துப் பின்னர் அசையாது நின்றேன். அதற்கு மேல் போக என்னால் முடியவில்லை. நடுங்கும் கரத்தால் வெள்ளைப் பல்லை என் கைக்குட்டையிலிருந்து எடுத்து என் சக்தி கொண்ட மட்டில் மயானத்துக்குள் வீசி எறிந்தேன். அதே வினாடியில் கோயில் கோபுரத்தின் உச்சியில் இருந்த இரும்புக் கோழி ஒரு முறை சுழன்றது. இரும்பு இரும்பை அறுப்பது போன்ற அதன் கிரீச் கிரீச் அலறல் என் எலும்பு வரை ஊடுருவியது. நான் வாசல் வழியே பாய்ந்து சென்று குன்றுச் சரிவில் கீழிறங்கி வீடு நோக்கி ஓடினேன். சமையல் அறையை அடைந்ததும் அங்கிருந்தவர்கள் என் முகம் வெண்பனி போல் வெளுத்திருப்பதைக் கண்டனர்.

அதன்பிறகு பல ஆண்டுகள் சென்றுவிட்டன. ஆனால் எனக்கு எல்லாம் தெளிவாக நினைவுக்கு வருகின்றன. மயானத்தின் நுழைவாசலருகே நான் மண்டியிட்டுக் கிடந்ததை இன்னும் மனத் திரையில் பார்க்கிறேன். சிவந்த தாடியை உடைய அம்மனிதனைப் பார்க்கிறேன். அவன் வயது என்னவாயிருக்கும் என்று உத்தேசமாகக்கூட என்னால் கூற முடியவில்லை. இருபது வயதாக இருக்கலாம். நாற்பதாகவும் இருக்கலாம். அந்தத் தருணத்தில்தான் அவனைக் கடைசித் தடவையாகப் பார்த்தேன் என்றில்லையாதலால் இது பற்றி நான் பல தடவைகளில் யோசித்திருக்கிறேன். ஆனால் இப்போதுகூட அவன் வயதை என்னவென்று கூறலாம் என்று எனக்குத் தெரியவில்லை.

அம்மனிதன் பின்னால் பல நாட்களில் மாலை நேரங்களிலும் இரவுகளிலும் வந்திருக்கிறான். அவன் தோன்றுவான், புன்னகை புரிவான்; அகன்ற வாயின் இளிப்பு ஒரு பல் குறைவதைக் காட்டும். பிறகு அவன் மறைந்து போவான்.

வெண்பனி பெய்தது. அதனால் மயான பூமிக்குச் சென்று அந்தப் பல்லைப் பூமிக்கடியில் புதைக்க என்னால் முடியவில்லை. அம்மனிதன் குளிர் காலம் முழுவதும் வந்து போவதைத் தொடர்ந்தான். ஆனால் அவன் தோற்றங்களுக்கிடையே படிப்படியாக இடைவெளி அதிகரித்தது. இடுக்கி போல் என்னைப் பற்றிக் கொண்டிருந்த பயம் மறைந்தது. ஆனால் என் வாழ்க்கையை அவன் துன்பமயமாக்கினான்; அளவிட முடியாத அளவு துன்பமயமாக்கினான். அந்த நாட்களில் நான் பல சந்தர்ப்பங்களில் க்ளிம்மா நதியில் வெள்ளப் பெருக்கு ஏற்படும்போது அதில் விழுந்து இந்தச் சித்திரவதைக்கு முடிவு கட்டலாம் என எண்ணுவேன். இந்த எண்ணம் எனக்குக் கொஞ்சம் மகிழ்ச்சியை அளிக்கும்.

இளவேனில் காலம் வந்தது. அம்மனிதன் அடியோடு மறைந்து போனான்.

அடியோடா? இல்லை! அடியோடு இல்லை! கோடை காலம் முழுவதும்தான். அடுத்த குளிர் காலத்தில் அவன் மீண்டும் தோன்றினான். ஒரு தடவைதான் வந்தான். அப்புறம் நீண்ட காலம் விலகியிருந்தான். அவனை முதன் முதலில் சந்தித்து மூன்று வருடங்களுக்குப் பிறகு, நான் வடதேசத்தை விட்டுப் புறப்பட்டேன். ஒரு வருஷம் கழித்துத்தான் திரும்பி வந்தேன். அப்போது எனக்கு வேலை நிரந்தரமாகியிருந்தது. வளர்ந்துவிட்ட மனித

## ஊருக்கு ஒரு துணுக்கு!

### டெல்லி

சென்ற வாரம் ஒரு நாள் பாலம் விமான நிலையத்தில் தேசியக் கொடி அரைக் கம்பத்தில் பறந்து கொண்டிருந்ததாம்.

எதற்கும் இருக்கட்டுமே என்று?

- ஹிந்துஸ்தான் டைம்ஸ்



★

### பம்பாய்

இங்கிள் என்பவர் இதுவரை டைம்ஸ் ஆப் இந்தியா ஆசிரியருக்குக் கடிதங்கள் பகுதியில் எண்ணூறு கடிதங்கள் எழுதியிருக்கிறார்.

- டைம்ஸ் ஆப் இந்தியா

★



### அகமதாபாத்

இந்தியாவில் தயாராகும் துணிகளில் இருபத்தைந்து சதம் இங்கே தயாராகிறது.

டைம்ஸ் வீக்லி



### கல்கத்தா

ஒரு பெண் பிரயாணி தனது மோதிரத்தைக் கல்கத்தா விமான நிலையத்தில் விட்டுவிட்டதாகச் சொன்னதால் புவனேசுவருக்குப் பறந்துகொண்டிருந்தவிமானம் திரும்பவும் கல்கத்தாவில் வந்து இறங்கியதாம்.

- ஸ்டேட்ஸ்மன்

★

### ஹைதராபாத்

ராமராவ் என்ற முப்பத்தைந்து வயது வக்கீல் ஆஸ்பத்திரியில் பத்து ஆண்டுகளாக மயக்க நிலையில் (Coma) இருக்கிறார். 1963ல் நிகழ்ந்த ஸ்கூட்டர் விபத்தில் இவருக்குத் தலையில் காயம் ஏற்பட்டது. - டைம்ஸ் ஆப் இந்தியா - தகவல்: பாலி

# முப்பதிற்கும் மேற்பட்ட நாடுகளில் மக்கள் இப்போது மோடி நூலை விரும்பி வாங்குகிறார்கள்

ஹாங்காங், சிங்கப்பூர், இந்தோனேஷியா, ஈரான், சைப்ரஸ், நைரோபி, பெரு, ஐரோப்பா ஆகிய இடங்களில் தரமானதை தேடி வாங்குவோர் மோடி நூல்களையே விரும்பித் தேர்ந்தெடுக் கிறார்கள். தேசியப் புகழ்பெற்ற மோடி நூல் இப்போது வெளிநாடு களில் பிரபலமாகியிருக்கிறது. மோடி நூல்களின் ஏற்றுமதி நம்ப முடியாத வேகத்தில் வளர்ந்து கொண்டிருக்கிறது. ஏற்றுமதியா கும் நாடுகளின் எண்ணிக்கை விரிவடைந்து வரும் அளவிற்கு அதன் வளர்ச்சியும்.

எங்களுடைய துணி தைப்பதற்கான நூல், எம்ப்ராய்டரி நூல், தோல் பொருட்கள், வலைகள் ஆகியவற்றை தைப்பதற்கான நூல்கள், கயிறுகள் ஆகியவற்றுக்கு வெளிநாடுகளில் நல்ல கிராக்கி இருக்கிறது. மோடி நூல்களின் தரத்திற்கு இது தக்கதொரு அத்தாட்சி என்பதில் சந்தேகமில்லை.

கவனத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்ட மூலப் பொருள்கள், உன்னத தொழில்நுட்ப முறை, கண்டிப்பான தரக் கட்டுப்பாடு இவையனைத்தும் இணைந்து மோடி நூலை உருவாக்குகின்றன. ஆகவே, மோடி நூல்கள் நீங்கள் எதிர்பார்ப்பது போலவே நன்கு உழைக்கின்றன.

மோடி நூல்—தேசிய நூல். இப்போது உலகப் புகழுடன் விளங்கும் நூல்.

**நீங்கள் வாங்கும் தரமான அதே மோடி நூலையே இப்போது உலக மக்கள் விரும்பி வாங்குகிறார்கள்.**



**மோடி**

தரமான நூல்களைத் தயாரிப்போர்

மோடி த்ரெட் மில்ஸ்

மோடி நகர் - பம்பாய் - கல்கத்தா - தில்லி - சென்னை



''உங்க பையனை இப்பவே பெண்ணை நன்னு பார்த்துக்கச் சொல்லுங்க!''

---

ளாக என்னை நானே உணர்ந்தேன். இப்போது நான் மாதா கோயிலை ஒட்டிய வீட்டில் என் மாமாவுடன் வசிக்கவில்லை. என் வீட்டில் என் தாய் தகப்பனுருடன் வாழ்ந்தேன்.

இலையுதிர் காலத்தில் ஒரு நாள் பிற்பகலில் படுத்துறங்க முற்பட்டபோது ஒரு குளிர்ந்த கரம் என் நெற்றியில் வைக்கப்பட்டது. என் கண்களைத் திறந்து பார்த்தேன். என் முன்னுல் அம்மனிதன் கட்டிலருகில் ஒரு நாற்காலியில் அமர்ந்திருக்கக் கண்டேன். நான் அந்த அறையில் தனியாகத் தூங்கவில்லை. எனது இரண்டு சகோதரர்கள் உடன் இருந்தார்கள். அவர்களில் ஒருவரையும் நான் எழுப்பவில்லை. என் நெற்றியில் குளிர்ச்சியான அழுத்தத்தை உணர்ந்ததும் கரத்தை உயர்த்தி, ''போய் விடு!'' என்றேன்.

என் சகோதரர்கள் தங்கள் படுக்கைகளிலிருந்தபடியே நான் யாருடன் பேசுகிறேன் என்று கேட்டார்கள்.

அம்மனிதன் சற்று நேரம் அசையாது அமர்ந்திருந்த பிறகு தன் உடலை முன்னும் பின்னுமாக ஆட்டத் தொடங்கினுன். இப்படிச் செய்து கொண்டே அவன் மிதந்து உயர்ந்தான். சிறிது சிறிதாகக் கூரை வரைக்கும் அவன் மிதந்து உயர்ந்து விட்டான். இதற்கு மேல் போக முடியாது என்று தோன்றியதும் அவன் நிற்கும் நிலைக்கு வந்தான். உயிரற்ற நடை பயின்று தரை மீதாக நழுவி என் கட்டிலின் அருகேயிருந்து விலகிச் சென்றுன். கணப்பு அடுப்பை நெருங்கியதும் அவன் மறைந்துவிட்டான். அன்றுபோல் அதற்கு முன்னுல் அவன் எனக்கு அவ்வளவு அருகில் இருந்ததே இல்லை. இம்முறை அவன் முகத்தை நான் நேருக்கு நேர் பார்த்தேன். அவன் பார்வை வெற்றுப் பார்வையாக இருந்தது. ஆனுல் அதில் தந்திரமும் தெரிந்தது. அவன் என்னைப் பார்த்தான். ஆனுல் எனக்கு அப்பால் எதையோ பார்ப்பது போல் காணப்பட்டான். என்னை ஊடுருவி அப்பால் ஏதோ வேறு ஓர் உலகத்தைப் பார்ப்பது போல் தோன்றினுன். அவனுக்குச் சாம்பல் நிறக் கண்கள் எனக் கண்டேன். அவன் முகத்தின் எந்தப் பாகத்திலும் அசைவுகளைக் காணும். புன்னகை புரியவில்லை. எனது நெற்றியிலிருந்து அவன் கரத்தை நான் விலக்கி, ''போய்விடு'' என்றபோது அவன் தன் கரத்தை மெல்லப் பின்னுக்கு இழுத்துக் கொண்டான். என் படுக்கைக்கருகே அவன் உட்கார்ந்திருந்த நேரம் முழுவதிலும் அவன் ஒரு தடவைகூடக் கண் கொட்டவில்லை.

சில மாதங்கள் கழித்துக் குளிர் காலம் வந்தது. நான் மீண்டும் வீட்டை விட்டுக் கிளம்பி ஒரு வியாபாரியின் இல்லத்தில் சில காலம் வசித்தேன். அவருக்கு அவரது கடையிலும் காரியாலயத்திலும் ஒத்தாசை செய்தேன். இங்குதான் நான் அம்மனிதனைக் கடைசித் தடவையாகச் சந்தித்தேன்.

ஒரு நாள் மாலை நான் என் அறைக்குச் சென்றேன். விளக்கேற்றிவிட்டு உடைகளைக் களைந்தேன். என் காலணிகளைப் பையன் வந்து சுத்தப்படுத்திவிட்டுப் போவான் என்பதால் வழக்கம்போல் அறைக்கு வெளியே வைக்கக் கருதினேன். அவற்றைக் கையில் எடுத்துக் கொண்டு கதவைத் திறந்தேன்.

அங்கே எனக்கு நேர் எதிரே நடைபாதையில் அவன் நின்று கொண்டிருந்தான். அதே சிவப்புத் தாடி மனிதன்!

பக்கத்து அறைகளில் ஆட்கள் இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியுமாதலால் நான் பயப்படவில்லை. காதில் விழக்கூடிய அளவுக்குக் குரலை உயர்த்தி நான் முணு முணுத்தேன்: ''நீ மறுபடியும் வந்துவிட்டாயா?'' ஒரு விநாடிக்குப் பிறகு அந்த மனிதன் தன் பெரிய வாயைத் திறந்து புன்னகை புரிய ஆரம்பித்தான். பழகிவிட்டதால் இது இப்போதெல்லாம் எனக்கு வேதனை தரும் விஷயமாக இருப்பதில்லைதான். ஆனுல் இம்முறை நான் மிகவும் உன்னிப்பாய்க் கவனித்தேன்.

ஒரு பல் குறைவாயிருந்ததானது இப்போது அதனிடத்துக்கே திரும்பி வந்து சேர்ந்திருந்தது!

ஒருகால் அதை யாரேனும் கண்டுவிட்டுப் பூமிக்குள் புதைத்திருக்கலாம். ஒரு கால் கடந்து போன பல வருஷங்களில் அது உடைந்து பொடியாவது சாத்தியமாகி எந்த மண்ணிலிருந்து பிரிந்து வந்ததோ அந்தத் தூசியிலேயே ஒன்றிவிட்டிருக்கலாம். எதுவோ கடவுளுக்குத்தான் வெளிச்சம்.

அம்மனிதன் வாயை மூடினுன். நான் இன்னும் நிலை வாசலில்தான் நின்று கொண்டிருந்தேன். அவன் திரும்பி மாடிப் படிகளில் இறங்கினுன். கீழ்ப் படியை அடைந்ததும் மறைந்து விட்டான்.

அவனை அதன் பிறகு நான் பார்க்கவே யில்லை. பல ஆண்டுகள் சென்று மறைந்து விட்டன.

இந்த மனிதன் — சிவந்த தாடியுடைய மனிதன் — மரண லோகத்திலிருந்து வந்த தூதன் — எனது குழந்தைப் பருவத்தில் சொல்லி முடியாத பயங்கரத்தைக் கொணர்ந்து சேர்த்தான் என்ற அளவில் எனக்கு நிரம்பத் தீங்கு இழைத்தவன்தான்.

ஆனுல் அவன் எனக்குத் தீங்கு மட்டும் தான் இழைத்தான் என்றும் சொல்ல முடியாது. இதை நான் பல சந்தர்ப்பங்களில் நினைத்துப் பார்த்திருக்கிறேன்.

நான் முதன் முதலாகப் பல்லைக் கடித்து மனத்தைக் கல்லாக்கிக் கொள்ளக் கற்றுக் கொண்டதற்குக் காரணமானவன் இவன்தான் என்று நம்புகிறேன். இந்தப் பழக்கம் பிற்காலத்தில் எனக்கு ரொம்பச் சௌகரியமாய் இருந்து வந்திருக்கிறது. அதற்குத் தேவையும் நிச்சயம் இருந்திருக்கிறது.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்:

ஜி. ராஜேந்திரன்

**கல்கி** ஆகஸ்டு 5ல்
ஆண்டு மலர்
அதிக பக்கங்கள்!

அமரர் **கல்கி** எழுதிய

# சிவகாமியின் சபதம்



(வண்ணப் படங்களுடன்)

குறுநாவல்: **'ரோஜா'** – சுஜாதா

புதிய சித்திரத் தொடர்:
**இன்ஸ்பெக்டர் விக்ரம்**

மூன்று சிறப்புச் சிறுகதைகள்:
**பி.வி.ஆர்**
**கோமகள்**
**டி.கே.டி. துரைராஜன்**

புதிய அம்சங்கள்:
**குடும்பப் பிரசிடெண்ட்!**
**மனம் திருந்தினேன்!**

**'மூன் ஏஜ்'**
சிறுகதைகள்
ஆரம்பமாகின்றன.

# இரக்கம்

ஹரஞ் ஜார்லி யோகீலு

ரஜப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். கட்டிலில் தன் பக்கத்தில் படுத்திருந்த மனைவியைப் பார்த்தான். முற்றிய நோயாளி இறுதிக் கட்டத்தை நெருங்கிவிட்டார்போல் மூச்சு விட்டுக் கொண்டிருந்தாள். இடுப்பொடிய வேலை செய்துவிட்டுக் களைத்துப் போய் உறங்கிக் கொண்டிருந்தவள் அவள். இழைந்தோடிய மூச்சை இடையிடையே குறட்டை ஒலி வெட்டியது.

நெற்றியில் துளிக்க வியர்வை கோடையின் கொடுமையினால் வாடி வதங்கிவிட்ட அவள் முகத்தில் இறங்கி அதில் சேர்ந்திருந்த அழுக்கைக் கரைத்துக் கொண்டு, வெய்யிலில் வெந்து கன்று போன கழுத்து வழியாகத் தோள்பட்டைக் குழியில் பாய்ந்து தேங்கியது. அங்கிருந்தும் வழிந்து உடல் முழுவதையும் நனைத்துக் கொண்டிருந்தது.

அவள் மூச்சை உள்ளுக்கு இழுக்கும்பொழுதெல்லாம், மார்பகம் விம்மித் தணிந்தது. அழகு குலைந்து காட்சியளித்த அவளை வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்த ரஜப் முணுமுணுத்தான்: ''யாராவது குருடன்தான் இவளைப் பெண் என்பான்!''

இரவு இறங்கி வெகு நேரம் ஆகியும் காற்றில் குளுமை ஏறவில்லை. ரஜப் இருளிலேயே தட்டித் தடவிச் செருப்புக்களை அணிந்து கொண்டான். எழுந்து நடந்தவனை அந்த இருளிலும் பழகிய கால்கள் சரியான வழிகாட்டி வெளியே இட்டு வந்தன. வீட்டுக்கு வெளியே வந்தவன் வெற்றுத் தரையில் படுத்துக் கொண்டான்.

சூடேறிய காரிருளில் கிராமமே கரைந்து போனாற் போலிருந்தது.

பொழுதைப் பிடித்துத் தள்ளும் எண்ணத்தில், புகையிலை வைத்திருந்த மரப் பெட்டியை எடுத்தான்; புகையிலையைச் சுற்றிச் சுருட்டு செய்தான். அவன் மனத்தில் இனந்தெரியாததொரு வேதனை தலைதூக்கி நின்றது. இந்த வேதனையை எதற்கு ஒப்பிடுவது? கிராமப் பஞ்சாயத்துத் தலைவர் தேர்தலில் தோல்வியைத் தழுவினானே, அதற்கு ஒப்பிடலாமா? ஊஹூம்! போலீஸார் அவனை ஏதோ வழக்கில் சிக்க வைத்துப் போட்டுப் புரட்டியெடுத்தார்களே, அதற்கு இணையாகச் சொல்லலாமா? ஊஹூம்! வண்டி நிறையக் கிர்னிப் பழங்களை ஐம்பது வீராவுக்கு விற்று முடித்த ஒரு மணி நேரத்துக்கெல்லாம் எழுபத்தைந்து வீராவுக்கு வாங்கிக் கொள்ளக் கிராக்கி வந்ததே, அந்தத் துயரத்துக்கு ஈடாகக் கொள்ளலாமா? இந்த வேதனைக்கு நிகராக எதையுமே கொள்ள முடியவில்லை.

கடந்த சில நாட்களாகவே அவன் மனத்தில் உளைச்சலைப் பாய்ச்சக்கூடிய காரியம் எதுவுமே நிகழவில்லை. வள்ளிக் கிழங்குகள் சரியான காலத்தில் பயிராகிவிட்டன. காலை முறித்துக் கொண்ட உழவு மாட்டின் காயம் கூட ஆறிவிட்டது. பசு கன்று ஈன்றுவிட்டிருந்தது. அவனை வழக்கில் மாட்ட வைத்த போலீஸ்காரர் அவனுடன் காப்பி விடுதியில் அமர்ந்து சீட்டுக்கூட ஆடினார். இதையெல்லாம் பார்க்கும்பொழுது உண்மையில்



■ □ ■ □ ■ □ **துருக்கியக் கதை**

பொறுமையே உருவானவள் பெண்; வேலைக்கே தன்னை அர்ப்பணித்துக் கொண்டவள் பெண்; கணவனைக் கண்ணாகப் போற்றி அவனது திருப்தியையே தன் திருப்தியாகக் கொண்டவள் பெண்.

ஆனால் ஆண்.....?

ஈவு இரக்கம் சிறிதும் இல்லாத கொடும் நெஞ்சனா? 'இல்லை, இல்லை' என்று சொல்பவர்கள் இந்தக் கதையில் வரும் ஆணுக்கு இரக்கம் சுரக்கும் அழகைக் காணலாம். இந்தத் துருக்கியக் கதை அந்த இரக்கத்தை எப்படிக் கலையாக வடிக்கிறது என்பதையும் காணலாம்.

□ ■ □ ■ □ ■ □ ■ □ ■ □

அவனுக்கு அதிருப்தி ஏற்படக் காரணம் எதுவுமே இல்லை. இருந்தாலும் மன உளைச்சல் உந்தவே, வலப்புறமும் இடப்புறமும் புரண்டு புரண்டு படுத்து அலைபாய்ந்துகொண்டிருந்தான்; அதுவும் ஜில்லென்றிருந்த வெறுந் தரையில். அவன் தன் சிந்தனையை நிறுத்தவே, உறக்கம் அவனை ஆழ்த்தியது.

அவன் கண் விழித்தபொழுது நன்றாகப் பொழுது விடிந்துவிட்டிருந்தது. அவன் மனைவியும் பெண்களும் வெகுநேரத்துக்கு முன்பே கீழே சமவெளிக்குச் சென்றுவிட்டிருந்தனர். அவன் சோம்பலை நெட்டி முறித்து உதறித் தள்ளிவிட்டு எழுந்தான். குடிசையை நோக்கி நடந்தான். அங்கே அடுப்படியில் மோர்க் கிண்ணம் வைத்திருந்தது. அதில் ரொட்டியைத் தோய்த்துத் தின்று பசியாறினான். அவன் மனைவி படுக்கைகளையெல்லாம் சுருட்டி ஒன்றுக்கு மேல் ஒன்றாக அடுக்கியிருந்தாள். கொட்டில் கூட்டிக் கழுநீரைக் கலக்கி ஆடுமாடுகளுக்குத் தண்ணீரும் காட்டி முடித்திருந்தாள்.

எனவே, ரஜப் செய்வதற்கென்று எந்த வேலையுமே பாக்கியில்லை. வேண்டுமென்றால் தேநீர் விடுதிக்குச் சென்று அவன் சீட்டு விளையாடலாம். ஆனால் அப்பொழுது அவன் மனம் சீட்டாட்டத்தில் நாட்டம் கொள்ளவில்லை. அவன் உள்ளத்து வேதனை உடல் முழுவதையும் அரித்துக் கொண்டிருந்தது. அட, கடவுளே! இதென்ன வேதனை? மழை பெய்யவில்லையென்றால் அவனுக்கு மனத்தை என்னவோ செய்வதுண்டு. ஆனால் அப்படி ஒரு நிலை ஏற்படவில்லை. விளைச்சல் சரியில்லை என்றால் வருத்தம் ஏற்படுவதுண்டு. அப்படியும் இல்லை. உணவு இலாக்கா சிப்பந்திகள் வந்து 'லெவி'க்காகக் கதவைத் தட்டினால் உள்ளத்தைக் கிலி பிடிப்பதுண்டு. ஆனால் அப்படியும் இல்லை. அப்படியென்றால் இது என்ன வேதனை?

'ஒரு நடை வயல் — வாய்க்காலுக்குத்தான் போய்ப் பார்த்து வருவோமே!' என்று எண்ணியவன் 'இடம் மாறினால் ஒருவேளை மனமும் மாறலாமோ? வேதனை மறக்கலாமோ?' என்று எண்ணமிட்டான். அதைத்தொடர்ந்து 'அப்படியே இந்தப் பெண்கள் என்ன வேலை செய்திருக்கிறார்கள் என்பதையும் பார்த்தாற் போலிருக்குமே!' என்றும் நினைத்தான்.

மழை நின்று எத்தனையோ நாட்களாகியிருந்தன. இப்பொழுது வெய்யில் பூமியைப் பெருநெருப்பாகத் தகித்துக் கொண்டிருந்தது. கல்கோட்டை போன்ற மாட்டுக் கொட்டிலில் கோடையின் கடுமை காரணமாக ஒருநெடி வந்து கொண் டிருந்தது.



வெய்யிலில், கிராமமே பொரிந்துகொண்டிருந்தது. மக்கள் காலும் ஓடாமல் கையும் ஓடாமல் கட்டப்பட்டவர்கள் போலக் கிடந்தனர்.

கிராமத்துக் கோடிக்கு வந்துவிட்ட ரஜப் சிறிது நேரம் நின்றான். கைக் குட்டையினால் நெற்றியில் வழிந்த வியர்வையைத் துடைத்துக்கொண்டே மனத்துள் முணுமுணுத்தான்: 'நரகம் இப்படித்தான் தகிக்கும் என்றால் சொர்க்கத்துக்கு வழியைத் தேட வேண்டியதுதான்!'

கண்ணைப் பறிக்கும் வெய்யிலில் கண் இரப்பைகளை இடுக்கிக் கொண்டு பார்வை போன மட்டும் நோட்டம் விட்டான். வள்ளிக் கிழங்கு வயல்களில் ஒரே பெண்கள் கூட்டமாக இருந்தது. குடையென விரிந்த சிவப்பு பைஜாமாக்களில் மலர்ந்த கோசு (காலி பிளவர்) போல் அவர்கள் தோற்றம் அளித்தனர்.

இமை வழியே வழிந்த வியர்வை கண்களில் இறங்கி எரிச்சல் மூட்டிக் கொண்டிருந்தது. நனைந்த புருவங்களின் நீர்த் திரையிலே வயல்கள் வெகு தொலைவில் கனவெனத் தோன்றிக் கானல் நீராக மறைவதுபோல் காட்சியளித்தன. மண்வெட்டிகள் விடாமல் இயங்கிக் கொண்டிருந்தன. வெய்யிலில் பாளம் பாளமாக வெடித்துவிட்ட நிலம் மண்வெட்டி விழும் வேகத்தில் பொறபொறத்துப் போயிற்று. வள்ளிக் கிழங்கின் வேர்கள் புதிய காற்று கிடைத்த மகிழ்ச்சியில் ஆழ்ந்த மூச்சு வாங்குவதாகத் தோன்றியது.

ரஜப் மெதுவாகத் தன் மனைவியிருக்கும் இடத்தை நெருங்கி அவள் எதிரில் போய் நின்றான். ''பாதி வேலை முடிந்திருக்குமா?'' என்று தன் மனைவியைப் பார்த்துக்கேட்டான்.

நெற்றியில் கோத்து நின்ற வியர்வைத் துளிகளை நிலத்தில் வழித்து எறிந்து விட்டு, அதனை உறிஞ்சும் நிலத்தையே பார்த்த வண்ணம் சிறிது நேரம் நின்றாள் அவன் மனைவி. பேச நினைத்தும் வறண்டு உலர்ந்து போன அவள் தொண்டையிலிருந்து வார்த்தைகளே எழவில்லை. எப்படியோ கனைத்துக் கொண்டு கூறினாள்: ''எங்கே? இன்னும் இருபது ஏக்கர் பாக்கி யிருக்கிறதே!''

''அப்படியானால் பத்து நாட்களாக நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?''

ஆண் பிள்ளை என்ற ஆணவத்தில் ரஜப் கடுமையான சொற்களை உதிர்த்தான்: ''உன்னைத்தாண்டி கேட்கிறேன். நாசமாய்ப் போக நீ! காது செவிடா உனக்கு?''

அவள் மெதுவாகத் தன் தலையைத் தூக்கினாள். வாய் திறந்து மறுமொழி எதுவும் கூறாமல் தன் கணவனைப் பார்த்தாள். மூச்சு முட்டி உயிர் விடத் துடிக்கும் மிருகத்தைப் போல் அவளுக்கு மேல் மூச்சு—கீழ் மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. வியர்வையும், தூசியும் படிந்து, வீங்கித் தொங்கிய அவள் கன்னங்கள் மேகம் சூழ்ந்த கரிய இருள் இரவை நினைவுபடுத்தின. மானிட இனத்தின் துயரம் அனைத்தும் அவள் முகத்தில் தேங்கி நின்றன. வாழ்க்கையின் அவமானம் அனைத்தும் அவள் முகத்தில் நிழலாடிக் கொண்டிருந்தன.

ரஜப் அதைக் கண்டு நிலைகுலைந்துவிட்டான்; நடுநடுங்கி நின்றான். கடைசியில் அவனுக்குத் தன் வேதனைக்குக் காரணம் விளங்கி விட்டது. அது அவன் உள்ளத்தை எப்படியெல்லாம் கசக்கிப் பிழிந்தெடுத்துவிட்டது!

அந்த வேதனை மனைவியின் மீது ஒரே இரக்கமாகச் சுரந்து வந்தது!

மறு நாள் மாலை ரஜப் கடைத் தெருவிலிருந்து இரண்டு பெரிய கப்பல் விளக்குகளை வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினான். மனைவியைப் பார்த்து, ''இந்தா, லாந்தர்கள்! பகல்வேளைகளில் மிகவும் வெய்யில் தகிக்கிறது. நீ ரொம்பக் களைத்துப் போய்விடுகிறாய்! இனி இவ்விளக்குகளின் உதவி கொண்டு நீ இரவு வேளைகளிலே வேலை செய்யலாம்!'' என்றான்.

சந்திரிகாவுடன் மட்டுமே
அழகு நிறைவு பெறுகிறது




# சந்திரிகா

ஆயுர்வேதிக் டாய்லெட் சோப்

சந்திரிகா பிராடக்ட்ஸ் கோயம்பத்தூர்-2 சென்னை-10

பிரிண்ட்டெட் புடவைகளை
பெருமையுடன் அளிக்கும்

# கலா மந்திர்



நேர்த்தியான டிசைன்கள், கண்ணுக்கினிய வண்ணங்கள். பருத்தி மற்றும் இதர ரகங்களில் எண்ணில்லா வகைகள்.

புத்தம் புதிய நைலான் புடவைகள், மென்மையும் வசீகரமும் கொண்ட 'ஹிட்-ஹிட்,' 'நிட்டெட் மற்றும் 'ட்ரீம் கோல்' ரகங்களை கலா மந்திரில் காண வாருங்கள்.

நவீன நாகரீக புடவைகளுக்கு-

**கலா மந்திர்.**

தன் பில்டிங், 175/1, மவுண்ட் ரோடு,
சென்னை - 600002, தொலைபேசி: 84983.

Criterion KM 2952 TM A

# ராஜாஜியின் ஜெயில் டைரி

அரசியல் கைதிகளை நடத்தும் விஷயத்தில் சிறைத் தலைமை அதிகாரியுடன் செய்துகொண்ட ஒப்பந்தம் அவரால் சரிவர நடத்தப்படவில்லை என்று ஜெயிலரிடம் முறையிட்டேன். ஒப்பந்தத்துக்கு விரோதமாக, புதிதாய் வந்த அரசியல் கைதிகளுக்கு எவ்வளவு கடினமான வேலை கொடுக்க முடியுமோ, அவ்வளவு கடினமான வேலை கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒப்பந்தத்தில் கண்ட மற்ற விஷயங்களும் கவனிக்கப்படவில்லை. ஜெய்லர் 'நான் என்ன செய்ய முடியும்' என்று கையை விரித்தார். ஏதோ நல்லெண்ணம் இல்லை இந்த விஷயத்தில் என்று தோன்றுகிறது. தண்ணீர் இறைக்கும் இயந்திரத்தில் வேலை செய்யச் சொல்லியிருந்த ஒரு வாலிபர் இரத்தம் கக்கினதாகவும் வைத்திய சாலைக்கு அனுப்பப்பட்டிருப்பதாகவும் அறிகிறேன்.

சகல அரசியல் கைதிகளையும் ஒரே ஒரு சிறையிலேயே அடைத்து வைக்க அரசாங்கம் தீர்மானிக்கும் போல் தெரிகிறது என்று ஜெய்லர் கூறினர். இப்படிச் செய்தால் சிறை அதிகாரிகளுக்குப் பெரிய ஆறுதல் உண்டாகும் போல் தெரிகிறது. சிறை நிர்வாக ஊழல் வெளியே தெரிந்து விடக் கூடாது என்று எண்ணுகிறார்கள். அரசியல் கைதிகள் இருந்தால் சிறை நிர்வாகத்தில் சீர்திருத்தம் செய்ய வேண்டி யிருக்கும். அதை அவர்கள் விரும்பவில்லை. தங்கள் அக்கிரமச் செயல்களையும், தவறான வழக்கங்களையும் விட்டுவிடப் பிரியப்படவில்லை. இதைத் தவிர அவர்களுக்கு அரசியல் கைதிகளிடம் வேறு எவ்வித வருத்தமும் கிடையாது.

அடுத்த அறையில் உள்ள மகமது கௌஸ் சாகேப் ''லா இல்லா'' என்று செய்யும் பிரார்த்தனையானது என்னுடைய மௌனப் பிரார்த்தனையுடன் அழகாக இணைந்து கொள்கிறது. இப்படி இருந்தும் இரண்டு சமூகத்தாரும் பகைத்துக் கொண்டு சண்டை போட்டுக்கொள்கிறார்கள். ஒருவரை யொருவர் கொன்று வருகிறார்கள். இன்னும் மனஸ்தாபம் மறையாதிருந்து வருகிறதைக் காண வருத்தமா யிருக்கிறது.

**1922 பிப்ரவரி, 16உ**

வியாழக் கிழமை: என் விடுதலை நான் சமீபித்துக் கொண்டிருப்பதால் இப்போதுதான் என்னுடைய சுதந்திரம் எவ்வளவு பயனற்றது என்பது தெள்ளத் தெளிவாக விளங்க ஆரம்பிக்கின்றது. வெளியே சென்றதும் நான் பார்க்கக் கூடியது யாது? போர்க்களம் வெற்றிடமா யிருக்கும். போர்வீரர்கள் எங்கும் காணப்படமாட்டார்கள். இன்னும் ஒரு மாத காலம் இருக்கிறது. அதற்குள் வேறு விதமான திட்டம் தீட்டப்படா விட்டால் மனச் சோர்வை நான் எப்படிச் சமாளிக்கப் போகிறேன் என்பது எனக்கு இன்னும் விளங்கவே இல்லை.

காந்தியடிகள் உண்ணாவிரதம் இருப்பதாக இன்று இரவு விஷயம் அறிந்தேன். கோரக்பூரில் ஜனக் கூட்டத்தார் சத்தியாக்கிரக இயக்கத்திடம் அனுதாபம் உடையவர்களாய் இருந்த போதிலும், அஹிம்சா தர்ம போதனையைப் பல



முறை கேட்டிருந்த போதிலும் பலாத்காரத்தில் இறங்கிவிட்டார்கள். அவர்களுடைய குரூரத் தன்மையும், கோழைத்தனமும் காந்தியடிகளுக்குப் பெரும் அதிர்ச்சியை உண்டாக்கி விட்டது.

அவர் உண்ணாவிரதம் இருக்கத் தீர்மானித்ததன் காரணம் யாது? காங்கிரஸ் தொண்டர்கள் கோரக்பூரில் நடந்த கொலைக்குக் காரணஸ்தர்களாகவோ, அல்லது உடந்தையாயிருந்தவர்களாகவோ அவருக்குப்பட்டிருக்க வேண்டும். அல்லது இயக்கத்திடம் அனுதாபம் காட்டும் ஜனக் கூட்டத்தாரும் இயக்கத்தை நடத்துகிறவர்களைப் போலவே பலாத்காரத்தில் இறங்காதிருக்க வேண்டும் என்ற அனுபவ சாத்தியமில்லாத நிபந்தனை ஒன்றை அவர் ஏற்படுத்துவதாயிருக்க வேண்டும்.

ஒத்துழையாமையிடம் அனுதாபம் காட்டாதவர் நாட்டில் கிடையாது என்று கூறலாம். அதனால் இத்தகைய

நிபந்தனையைக் காந்தியடிகள் கூறினால் அதன் பொருள் இதுதான்: இயக்கம் நடைபெறும்பொழுது யாரும் பலாத்காரச் செயல்கள் புரியக் கூடாது.

காங்கிரஸ் ஊழியர்கள் கொலைகளைச் செய்யவோ, செய்யும்படி தூண்டவோ செய்தால் மட்டுமே காந்தியடிகள் இயக்கத்தை நிறுத்தவோ, உண்ணாவிரதம் இருக்கவோ நியாயமுண்டு. அஃதின்றி இரண்டாவது காரணத்தைக் கூறினால் அவர் கூறும் நிபந்தனை யாராலும் நிறைவேற்ற முடியாததே என்று நான் கூறுவேன்.

கோரக்பூரில் ஜனக் கூட்டத்தார் செய்த காரியங்கள் அதிக அக்கிரமமானவை என்பதை நான் முற்றிலும் ஒப்புக் கொள்கிறேன். என் தலைவரிடமும் அவருடைய லட்சியத்திடமும் எனக்குப் பரிபூரணமான நம்பிக்கை உண்டு என்பதிலும் சந்தேகமில்லை. அப்படியிருந்தாலும் இத்தகைய சம்பவங்கள் நடந்துவிட்ட காரணத்துக்காக இயக்கத்னத நிறுத்தி வைப்பது என்பது எனக்கு விளங்கவேயில்லை. கோரக்பூர் சம்பவங்களைக் காரணமாகக் கொண்டு இயக்கத்தை நிறுத்துவதானால் இவற்றைவிட அதிகக் கோரமான மலையாள அக்கிரமங்களுக்கு நிறுத்தி வைக்க வேண்டாமோ? அப்படி நாம் நிறுத்தி வைக்கவில்லையே? அதனால் நிறுத்தி வைத்ததைச் சரி என்று என்னால் கூற முடியவில்லை. ஆனால் ஒருவேளை வெளியே போய் விவரங்களையெல்லாம் அறிந்தால் வேறு விதமான கருத்து எனக்கு உண்டாகுமோ, என்னவோ?

ஆனால் ஒரு விஷயம். அறிவு வழி காட்ட முடியாத இடத்துக்கு ஆண்டவன் வழி காட்ட முடியும். காந்தியடிகளை இந்தச் சமயம் இழந்துவிடலாகாது. தேசம் அதற்குத் தக்க ஆற்றலை இன்னும் பெற்று விடவில்லை. அவர் கைதியாகிவிடக்கூடிய நிலைமையில் இருந்தார். அதனால்தான் ஆண்டவன் இந்த உண்ணாவிரதத்தை யேற்கொள்ளும்படி செய்து அவரைச் சிறை புகாமல் நமக்குக் காப்பாற்றித் தந்திருக்கிறானோ என்னமோ?

அது மட்டுமன்று: எத்தனை தியாகங்கள் செய்ய வேண்டுமோ அத்தனை தியாகங்கள் செய்யவும் நாடு இன்று தயாராகி விடவில்லை. அத்துடன் சீக்கிரமாக ஏதேனும் ஓர் ஒப்பந்தம் நடைபெற வேண்டும் என்பது கடவுள் சித்தமாக இருக்கலாம். இப்பொழுதுள்ள நிலைமையில் ஒப்பந்தம் உண்டானாலும் உண்டாகலாம்.

இதற்கிடையில் காந்தியடிகள் மேற்கொண்டுள்ள ஐந்து நாட்கள் உண்ணாவிரதம் அவருடைய வயதுக்கும் சரீர பலத்துக்கும் ஏற்றதல்லவே என்று தோன்றுகிறது.



"நம்ப ராஜன் கையில் நயா பைசா இல்லாமல் கஷ்டப்படுகிறதாக நினைக்கிறேன்!"

"ஏன் உன்னிடம் வந்து கடன் கேட்டானோ?"

"இல்லை, நான் அவனை 50 பைசா கடன் கேட்டேன். இல்லை என்று சொல்லி விட்டான்!"

"ஐயா, மிருக வைத்தியரே! மாடு — நன்றாக நடந்து கொண்டிருக்கிறது. ஆனால் — சில சமயம் நொண்டுகிறது என்ன செய்யலாம்?"

"நல்லா நடக்கிற சமயம் பார்த்து விற்று விடு!"

"நான் அப்படித்தானே வாங்கியிருக்கேன்!"



# ஞானக்குயில்

ஜெகசிற்பியன்



## 16. மனோகரியின் மனம்

கௌரியம்மாள் படுக்கையிலிருந்து மெல்ல எழுந்து உட்கார்ந்தாள். தன் கணவர் ஷெட்டில் காரை விட்டுவிட்டு உள்ளே வருவதைச் சன்னல் வழியாகப் பார்த்து விட்ட பிறகே அவள் அவ்வாறு எழுந்தாள்.

வேதமூர்த்தி கூடத்து அறையைக் கடந்து நேரே தம் மனைவி இருந்த படுக்கை அறைக்கு வந்து கட்டில் அருகில் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார். அவர் முகம் கவலையால் வாடி வதங்கிக் காணப்பட்டது.

கௌரியம்மாளின் பார்வை கூடத்து அறையிலும், அதற்கு அப்பால் வராந்தாப் பக்கமும் போய்த் திரும்பியது. பிறகு தம் கணவரின் முகத்தை ஒருவித ஆவலுடன் ஏறிட்டு நோக்கினாள்.

''மனோகரி எங்கே?'' என்று ஏதோ யோசனையாகக் கேட்டார் வேதமூர்த்தி.

'' இப்பத்தான் வெளியே கிளம்பினாள்.....'' என்று பலவீனமான ஸ்தாயியில் இழுத்தாள் கௌரியம்மாள்.

''வெளியேன்னா, எங்கே?''

''மயிலாப்பூர் வரையில் போயிட்டு வரேன்னு சொன்னாள்.''

''எதற்கு மயிலாப்பூர் வரை ?''

''காந்தி சமாஜத்திலே இன்னிக்குச் சர்வோதய தினம் கொண்டாடறாங்களாம். நூற்பு யக்ஞத்தில் கலந்து கொள்ள இவளும் போயிருக்கிறாள்.''

வேதமூர்த்தியின் முகம் திடீரென்று கோபத்தால் சிவந்தது. ''இங்கே வீட்டின் நிலைமை இப்படி இருக்கும்போது அவள் சர்வோதயம் காணப் போய்விட்டாளா ?'' என்று இரைந்தார்.

கௌரியம்மாள் அவரைச் சமாதானப்படுத்தும் வகையில் மெல்லச் சிரித்தவாறு. ''அவளாகப் போகலே. நான்தான் அவளைப் போயிட்டு வரும்படி சொன்னேன். இங்கே என்னையும், வீட்டு வேலைகளையும் கவனிச்சுக்கத்தான் ரங்குப் பாட்டி இருக்கிறாங்களே!'' என்றாள்.

வேதமூர்த்தி வேகமாகத் தலையசைத்தார். ''இதெல்லாம் சும்மாப் பேச்சு. அவளாகச் சொல்லிக் கேட்கல்லேன்னா, உனக்கு எப்படித் தெரியும், அங்கே நூற்பு வேள்வி நடக்கப் போகுதுன்னு ?''

''நர்சிங்ஹோமிலிருந்து என்னை நீங்க அழைச்சு வந்து வீட்டிலே விட்டுட்டு வெளியே போனதும், வீடெல்லாம் எப்படி இருக்குதுன்னு மெள்ள நடந்து போய் ஒவ்வோர் அறையாக — மாடிக்குப் போகலே! — பார்த்தேன். அப்போ அவளுடைய அறையில் அவள் பேருக்கு வந்திருந்த ஒரு கார்டு கிடந்தது. எடுத்துப் படிச்சேன். அது அந்தச் சர்வோதய தின விழா அழைப்புக் கடிதம். அப்புறம்தான் நானே அவளைக் கேட்டேன். 'போகணும், ஆனால் எப்படிப் போறது'ன்னு தயங்கினாள். 'பரவாயில்லை; போயிட்டுச் சீக்கிரம் வந்துவிடு: நான் பார்த்துக்கறேன்'னு சொல்லி அனுப்பினேன்.''

இவ்வளவு விளக்கமாகச் சொல்லியும் வேதமூர்த்தி திருப்தி அடைந்தவராகத் தெரியவில்லை. ஒருவிதச் சலிப்பும் விரக்தியுமாக, ''சரி, சரி; பிறத்தியாருக்கு வருகிற கடிதங்களை எடுத்துப் படிக்கிறதே உனக்கு ஒரு பொழுது போக்காப் போச்சு!'' என்றார் கரகரத்த குரலில்.

இதைக் கேட்டதும் கௌரியம்மாளின் முகம் ஜில்லென்று வெளுத்துச் சிறுத்தது. கண்ணிமைகள் படபடத்தன. உதடுகள் துடித்தன.

வேதமூர்த்தி பரபரப்பு அடைந்தவராய்த் தம் நாற்காலியை இன்னும் கொஞ்சம் அருகில் இழுத்துப் போட்டுக் கொண்டு, ''அடடே! நான் சும்மா

தமாஷுக்குச் சொன்னேன்; நீ ஒன்னும் தப்பா எடுத்துக் கொள்ளாதே, தாயே !'' ! என்றார் கேலிக் குரலில். அந்தக் குரலில் அவரையும் மீறிய ஒரு பயம் வெளிப்பட்டது.

கௌரியம்மாள் அவரைப் பரிதாபமாகப் பார்த்துவிட்டுத் தலை குனிந்து கொண்டாள்.

''ஏன் இதற்குள் எழுந்து உட்கார்ந்துட்டே ? வேணுமின்னு அப்படி அந்தக் கட்டிலின் தலைப்புச் சட்டத்திலே தலையணையைச் சாத்தி வைச்சுச் சாய்ந்து கொள்!'' என்றார் வேதமூர்த்தி பரிவும் கனிவுமாக. அவர் சொன்னபடியே கௌரி அம்மாளும் கட்டில் தலைப்புச் சட்டத்தில் முதுகைச் சாய்த்துக் கொண்டு உட்கார்ந்தாள்.

''காலையில் டாக்டர் என்ன சொன்னார் தெரியுமா? வேலை எதுவும் செய்யக் கூடாது. அதிக



நேரம் கண் விழிக்கக் கூடாது. இரைந்து பேசக் கூடாது. கோபப்படக் கூடாது. வீண் கவலை கொள்ளக் கூடாது என்று இன்னும் ஏதேதோ சொல்லி விட்டுக் கடைசியாக, மாடிப் படி ஏறக் கூடாதுன்னு திரும்பத் திரும்பச் சொன்னார்'' என்றார் வேதமூர்த்தி சிரித்துக் கொண்டே. அவளைச் சமாதானப்படுத்த மேலும் ஏதேதோ சொல்ல வாயெடுத்தார். பிறகு புன்முறுவலுடன், 'வேண்டாம்' என்று தமக்குத் தாமே தலையாட்டி நிறுத்திக் கொண்டார்.

சற்று நேரம் அவர்களிடையே அமைதி நிலவியது. மஞ்சள் பூசினாற் போல் இரத்தப் பசையற்று மெலிந்திருந்த இடக் கை விரல்களை மடக்குவதும் விரிப்பதுமாக ஏதோ சிந்தனையிலிருந்த கௌரியம்மாள் மெல்லத் தலை நிமிர்ந்து தன் கணவரைப் பட்டும் படாமலும் பார்த்து, ''போன காரியம் என்ன ஆச்சு?'' என்று தணிந்த குரலில் கேட்டாள்.

யோசனையில் ஆழ்ந்திருந்த வேதமூர்த்தியும் அதிலிருந்து இப்போதுதான் மீண்டவராய் அங்குமிங்கும் நோக்கிவிட்டு, ''ரங்குப் பாட்டி எங்கே?'' என்று வினவினார்.

''சமையல் அறையிலே இருக்கிறாங்க. இப்ப இங்கே வருகிறதுக்கு வேலை ஒண்ணுமில்லே.''

''சரி, சரி'' என்று தலையாட்டிக் கொண்ட வேதமூர்த்தி சிறு பொழுது மௌனத்துக்குப் பின், ''போனேன். எல்லா விவரங்களையும் சொல்லிக் கேட்டேன். எதற்கும் அந்த மடத்துத் தலைவி மசியவில்லை. அனுப்ப முடியாதுன்னு கண்டிப்பாகச் சொல்லிவிட்டாள்'' என்றார் துயரம் தோய்ந்த குரலில்.

''ஏன் அப்படிச் சொல்றாங்க ?''

''காரணமாகத்தான்!'' என்று கூறிய வேதமூர்த்தி, ''அதாவது, இன்னும் சில நாட்களிலே அந்தப் பெண், கன்னிகா ஸ்திரீயாகத் தீட்சை பெறப் போறாளாம்'' என்றார் வேதனை செறிந்த பெருமூச்சுடன்.

கௌரியம்மாள் இதைக் கேட்டு வியப்புடன் கண்களை அகல விரித்தாள். தலையணைச் சாய்வில் இருந்து சற்றே நிமிர்ந்து உட்கார்ந்து, ''என்ன இது அநியாயம்!'' என்று மிகுந்த ஆத்திரத்துடன் படபடத்தாள்.

''அமைதி! அமைதி!'' என்று அவளை நோக்கிக் கையமர்த்திப் புன்னகை பூத்த வேதமூர்த்தி



நிதானமாகச் சொன்னார்: ''ஒண்ணும் அநியாயமில்லே. அவர்கள் வரை அது நியாயம்தான்.''

''அப்போ, இனி என்ன செய்யப் போறீங்க ?''

''அதுதான் எனக்கும் புரியலே.''

''அந்த அம்மாளுக்கு ஒரு கடிதாசி எழுதி, அவங்களையே மடத்துத் தலைவியை நேரிடையாகக் கேட்கச் சொல்லுங்களேன்!''

''யோசிக்கலாம்'' என்று கரகரத்த குரலில் முணுமுணுத்த வேதமூர்த்தி சில விநாடிகளுக்குப்பின் தம் மனைவியை ஏறிட்டுப் பார்த்து, ''இங்கே பார், கௌரி! இந்த விஷயம் நம் இருவர் மனசோடு இருக்கட்டும். மனோகரிக்குக் கூட இது தெரிய வேணும்'' என்றார்.

கௌரியம்மாள் அவரைச் சற்று ஆச்சரியத்துடன் பார்த்தாள். ''அந்தப் பெண் நம்ம வீட்டுக்கு வராததாலே இப்படிச் சொல்றீங்களா?.... அவள் வந்திருந்தால்?''

## எரியாத 'பைப்'பும் எழிலான உவமையும்

சென்ற மாதப் பிற்பகுதியில் சென்னையில் அரங்கேறிய நாடகங்களுள் ஒன்று 'தராசு சிரிக்கிறது'.

மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் கிளப்பில் அரங்கேறிய தினம்.

கார் விபத்து ஒன்று ஏற்பட்டு, குழந்தை இறந்து விடுகிறது. காரோட்டிய வாலிபரைப் போலீஸார் கைது செய்து லாக்—அப்பில் அடைத்து விடுகிறார்கள்.

ஸ்டேஷனுக்குள் டி. எஸ். பி. யாக நடிக்கும் குமார் நுழைகிறார். அவர் கையில் எப்பொழுதும் 'பைப்' இருக்கும். சற்றுக்கொரு முறை அதை வாயில் வைத்துப் புகைக்கும் வழக்கமுடையவர்.

மேஜை முன் உட்கார்ந்து நெருப்புக் குச்சியைக் கிழித்துப் பற்ற வைக்கிறார். மும்முறை முயன்றும் எரியவில்லை.

அதே சமயம் டெலிபோன் மணி அடிக்கிறது. உள்ளூர் எம்.எல்.ஏ., லாக் - அப்பில் இருக்கும் வாலிபரை விடுவிக்கச் சொல்கிறார்.

டி. எஸ். பி. (குமார்) டெலிபோனில் பேசிவிட்டு, இப்படி ஒரு வசனம் கூறுகிறார்: ''வர வரப் போலீஸ் அதிகாரிகளின் கடமை, எரியாத 'பைப்' மாதிரி ஆகிக் கொண்டிருக்கிறது! எம். எல். ஏ.க்கள் இப்படிச் செய்வதால்தான்!''

நாட்டு நடப்பை இப்படிச் சேர்த்துச் சொன்னது நாடக 'டயலாக்' அல்ல. உதவியாளர் டி.எஸ்.பி.யின் 'பைப்'பில் அதற்குரிய புகையிலைத் தூளைத் திணிக்க மறந்து விட்டார்! அந்தத் தருணத்தில் அவர் தாமாகவே சேர்த்துக் கொண்ட திடீர் வசனம்தான் அது.

முதல் நாடகத்தில் எதிர்பாராமல் நடந்த தவற்றை அடுத்த நாடகத்தி விருந்து வேண்டுமென்றே செய்தார்கள். அதாவது பைப்புக்குப் புகையிலை வைப்பதைத் தவிர்த்தார்கள்! அந்த வசனம் நன்றாக அமைந்து பாராட்டுப் பெற்று விட்டதே!

—சிவபாலன்

நாடகத்துக்குள் ஒரு நாடகம்

''அவளைப் பற்றிய விஷயங்களை எப்படி மறைச்சு வைச்சிருக்க முடியும்னு கேட்கிறயா? அதற்கெல்லாம் நம்பு கிறாற்போல் சில கதைகளை ஜோடிச்சு வைச்சிருந்தேன்; இப்போதுதான் அந்தப் பிரச்னையே இல்லையே!''

''ஆனாலும் இது இதோடு முடிஞ்சு போய் விடுகிற விஷயமாய் எனக்குத் தோணலே.....'' என்று எங்கோ பார்த்துக் கொண்டு பகன்றாள் கௌரியம்மாள்.

இந்தப் பேச்சை இத்துடன் நிறுத்தி அவளுடைய கவனத்தை வேறு பக்கம் திருப்ப எண்ணியவர் போல், ''அது சரி, அந்த மாயவரத்துப் பிள்ளையாண்டான் மத்தியானச் சாப்பாட்டுக்கு வருவதாகச் சொன்னானா? மணி பன்னிரண்டரையாகப் போகிறது, இன்னும் வரக் காணுமே!'' என்றார்.

''அநேகமா அந்தப் பிள்ளை சாப்பாட்டுக்கு வராதுன்னு நினைக்கிறேன். மனோகரி அப்படித்தான் சொன்னாள்'' என்று கூறிய கௌரியம்மாள் உடனே, ''ஏங்க! இந்தப் பிள்ளையாண்டான் இங்கே நம்ம வீட்டுக்கு வருகிற நாளாய்ப் பார்த்து அந்த அம்மாள் உங்களுக்குத் தன் பெண் விஷயமாய்க் கடிதாசி எழுதியிருக்கிறாங்களே, அதைக் கவனிச்சீங்களா?'' என்று ஒருவிதக் குறுகுறுத்த பார்வையோடு கேட்டாள்.

இன்னமும் அவள் அந்த விஷயமாகவே சிந்தனை பண்ணிக் கொண்டிருக்கிறாள் என்பதைப் புரிந்துகொண்ட வேதமூர்த்தி அந்தக் கேள்விக்குப் பதில் ஏதும் சொல்லாமல் தலையாட்டியபடி மௌனமாயிருந்தார்.

அவருடைய மௌனத்திலிருந்து அவருக்கும் அவ்விஷயத்தில் குழப்பம் இருக்கிறது என்பதை ஊகித்துக் கொண்ட கௌரியம்மாள் மேற்கொண்டு அது பற்றிக் கேட்கத் தயங்கி அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

இந்தச் சமயம் ரங்குப் பாட்டி வந்து தலை காட்டவே, அதன் குறிப்பை உணர்ந்து கொண்ட வேதமூர்த்தி சாப்பிடுவதற்காக எழுந்து போனார்.

**மா**லை ஐந்து மணி வாக்கில் சோர்வும் களைப்புமாக வீடு வந்து சேர்ந்தான் நரசிம்மன். மவுண்ட்ரோட்டில் திருமலை அவனிடம் விடைபெற்றுக் கொண்டு போனபின், அங்கிருந்து கால் சென்ற திசையில் எங்கெங்கோ சுற்றி அலைந்துவிட்டு இந்நேரத்துக்குத் திரும்பினான் அவன்.

அப்போது வேதமூர்த்தி வீட்டில் இல்லை. ஏதோ காரியமாய் வெளியில்



இந்தியக் கப்பற்படையைச் சார்ந்த கமாண்டர் சந்திரமௌளீஸ்வரன் அவர்கள் குமாரத்தி சௌ. சசிகலாவுக்கும், பம்பாய் அமர் டை-கெம் லிமிடெட்டைச் சார்ந்த ஸ்ரீ ஆர். நாராயணன் அவர்கள் குமாரன் சிரஞ்சீவி என். ராமசுப்பன் அவர்களுக்கும் திருச்சானூரில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. அதை ஒட்டி சென்னை ராஜா அண்ணாமலைபுரம் 'நவகஜா'வில் நடைபெற்ற வரவேற்பு விழாவுக்கு மேன்மை தங்கிய தமிழ்நாடு ஆளுநர் அவர்களும், செட்டிநாட்டு ராஜா அவர்களும் மற்றும் நகரப் பிரமுகர்கள் பலரும் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்திச் சென்றனர்.

சென்றிருந்தார். பிற்பகல் இரண்டு மணிக்கே மனோகரி வந்துவிட்டிருந்தாள். 'நூல் நூற்பதில் தன் மனம் லயிக்காமல் அலைபாய்ந்து கொண்டிருந்ததால் எழுந்து வந்துவிட்டதாக'த் தன் தாயாரிடம் அவள் காரணம் கூறினாள். தன்னைப் பற்றிய கவலையினாலேயே மகளுக்கு அங்கு இருப்புக் கொள்ள முடியாமலாகி யிருக்கிறது என்று கௌரியம்மாள் அனுமானித்துக் கொண்டாள். அனுமானங்கள் எல்லாமே சரியாயிருந்து விடுவது இல்லை அல்லவா ? —

வீட்டில் நுழைந்ததுமே நரசு கௌரியம்மாள் இருந்த அறைக்குப் போய் அவளுக்கு வணக்கம் கூறி, அவளது உடல் நலம் பற்றி விசாரித்தான். அவனுடைய அந்தப் பரிவும் பணிவும் கனிவும் கரிசனமுமான பேச்சு அவளுக்கு ரொம்பவும் பிடித்துவிட்டது. ஒரு பதினேழு, பதினெட்டு வருடங்களுக்கு முன்னால் பார்த்த அம்மாபெரும் தேச பக்தரின் அதே அச்சான கம்பீரத் தோற்றத்துடன் அவன் இருக்கக் கண்டு உள்ளூற ஆச்சரியப்பட்டுப் போனாள் அவள். அவரையே இப்போது நேரில் தரிசித்தாற் போன்ற ஒரு பிரமையில் அவள் ஆழ்ந்தாள்.

நரசிம்மன் தன் அறைக்கு வந்ததும் முதல் காரியமாய் நன்றாய்க் குளித்தான். குளித்துவிட்டு வந்ததுமே வழக்கம் போல் அவனுக்காக டிபன்—காப்பி மேசையின்மேல் தயாராய்க் காத்திருந்தன. ஆனால் அவனுக்குச் சாப்பிடப் பிடிக்கவில்லை. மனம் அப்படிக் குழம்பிக் கிடந்தது. அதை வெளியே காட்டிக் கொள்ளக் கூடாதே என்பதற்காக, இருந்ததை எப்படியோ உண்டு முடித்துக் காப்பியும் பருகினான்.

வெளியே சென்றிருந்த வேதமூர்த்தி வந்து சேர்ந்தார். நேரே அவனுடைய அறையிலேயே பிரவேசித்து உட்கார்ந்து விட்டார். நேற்றிரவுக்குப் பின் இப்போதுதான் அவனை அவர் பார்க்கிறார். அவன் இங்கு வந்ததிலிருந்து இந்நேரம் வரை அவனோடு பேசவும், அவனது தேவைகளில் கவனம் செலுத்தவும் முடியாத நிலையில் தாம் இருக்க நேரிட்டதற்காக முதலில் தமது வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்டார். பிறகு, அவனுக்கெனத் தரப்பட்டுள்ள அறை, அதிலிருக்கும் வசதிகள், உணவு சவரட்சனை முதலானவையெல்லாம் திருப்திதானா என்று விசாரித்தார். 'எல்லாம் பரம திருப்தி' என்பதுபோல் அடக்கமாகத் தலையாட்டினான் நரசு. இவ்வளவு பெரிய மனிதர் தன் மீது இத்தனை கரிசனமும் கவனிப்பும் காட்டுகிறாரே என்று உள்ளூற வியந்து கொண்டான் அவன். இதெல்லாம் தனக்காக மட்டுமல்ல, தன் தந்தை மேல் இவர் வைத்திருந்த பற்று, பாசம், மதிப்பு, நல்லெண்ணம் ஆகியவற்றின் பிரதிபலிப்பாகவே இவ்வாறு நடந்து கொள்கிறார் என்பதையும் புரிந்து கொள்ளத் தவறவில்லை.

''என்னங்க தம்பி! போன காரியம் எல்லாம் நல்லபடியாக முடிஞ்சுதா ?'' என்று பேச்சை ஆரம்பித்தார் வேதமூர்த்தி.

அவ்விஷயமாய் இவரிடம் எப்படிப் பேசி என்னவிதமாய் நடந்து கொள்வது என்பது குறித்து ஏற்கனவே ஒரு முடிவு எடுத்து வைத்துக் கொண்டு வந்திருந்த நரசு சற்றும் தயங்காமல், ''இல்லை சார் ! இண்டர்வியூ நாள் தள்ளிப் போயிட்டது....'' என்றான் இழுத்தாற் போல்.

''அப்படியா?'' என்று 'ச்சு' கொட்டிக் கொண்ட வேதமூர்த்தி, ''அடுத்து என்றைக்காம் ?'' என்று கேட்டார் ஏதோ யோசனையாக.

''இந்த வாரத்துக்குள் மறு அழைப்பு வரலாம்'' என்று ஒரு போக்காகச் சொன்ன நரசு, மேற்கொண்டு அவர் அது பற்றித் தன்னிடம் துருவித் துருவிக் கேள்விகள் கேட்டுத் தனது

## கணநாதன் ஆலயத்தில் நவநாயகர்கள்

சென்னை, மூலக்கடையை அடுத்த ஆர். வி. நகரில் சிம்ஸன் குரூப் தொழிலாளர்கள் கூட்டுறவுச் சங்க அடிப்படையில் வீடுகள் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். இங்கே தங்கள் வழிபாட்டுக்கென ஒரு விநாயகர் ஆலயமும் எழுப்பியுள்ளனர். கூட்டுறவு சங்கத்துக்குத் தலைமை தாங்கிய திரு குருமூர்த்தியிடம் தங்கள் அன்பைக் காட்டும் வகையில் ''குரு விநாயகர்'' என்றே இப்பெருமானுக்குப் பெயரிட்டனர். தற்போது இவ்வாலயத்தில் ரூ. 15,000 செலவில் நவக்கிரகங்களுக்குச் சந்நிதி எழுப்ப உத்தேசித்துள்ளனர். ஸ்ரீ காஞ்சி ஆசாரியர்களின் ஆசி பெற்ற இந்தப் பணி நிறைவுற ஆஸ்திக அன்பர்கள் பொருள் அனுப்பக் கோருகிறோம்: ஸ்ரீ குரு விநாயகர் ஆலய நவக்கிரஹப் பிரதிஷ்டைக் கமிட்டியார், ஆர். வி. நகர், கொடுங்கையூர், சென்னை-51

குட்டு உடைபடும்படியாகப் பண்ணி விடுவாரோ என்று பயந்தவனாய் உடனே இந்தப் பேச்சை மாற்றினான். ''அம்மாவை இதற்குள்ளே ஏன் சார் வீட்டுக்கு அழைச்சுக்கிட்டு வந்துட்டீங்க? இன்னும் ரெண்டு மூணு நாளாவது நர்சிங் ஹோமில் வைச்சிருந்திருக்கலாமே!'' என்றான் கரிசனக் குரலில்.

''டாக்டரும் இதைத்தான் சொன்னார் தம்பி! அவள்தான் இருக்கமாட்டேன்னு வந்துட்டாள். இங்கே வீட்டில் தன் பெண் தனியாக இருக்கிறது பற்றி அவளுக்கு என்னவோ கவலே. ஆனாலும் டாக்டருடைய சம்மதத்தின் பேரில் தான் அழைச்சு வந்தேன். கொஞ்சம் கவனமா இருந்து கொள்ளணும். மற்றப்படி இனி பயப்பட ஒண்ணுமில்லே.''

அவரின் இந்த விளக்கத்திலிருந்து தன் மனத்தில் உறுத்திக் கொண்டிருக்கும் ஒரு கேள்வியைக் கேட்பதற்குச் சரியான 'பிடி' கிடைத்துவிட்டது என்ற துடிப்புடன் நிமிர்ந்தான் நரசு. ''ஆமாம், சார்! அவங்க அப்படிக் கவலைப்படறதிலும் நியாயம் இருக்குதுன்னுதான் நானும் நினைக்கிறேன். அதாவது....'' என்று வாக்கியத்தை முடிக்காமல் மென்று விழுங்கிவிட்டு அவர் முகத்தைப் பார்த்தான்.

'என்ன' என்பது போல் அவரும் அவனை ஏறிட்டு நோக்கினார்.

ஒரு கணம் தயங்கிய நரசு, ''ஒண்ணுமில்லே சார்.....! நேத்திக்குச் சாயந்திரம் நம்ம வீட்டண்டை ஏதோ ஒரு கம்பெனியின் தொழிலாளர்கள் ஊர்வலமாய் வந்து அத்துமீறி நடக்க முற்பட்டாங்களாமே? உள்ளூர்ப் பத்திரிகையில் நியூஸ் படிச்சேன்; அது நிஜம் தானா சார்?'' என்று ரொம்ப சகஜமாகவும், உரிமை கலந்த ஓர் ஆவலுடனும் கேட்கும் பாவனையில் அவரைக் கேட்டான்.

வேதமூர்த்தி இந்தக் கேள்வியினால் எவ்வித வருத்த உணர்வோ மனச் சுளுக்கோ அடைந்ததாகத் தெரியவில்லே. அவர் வழக்கம்போல் சிரித்துக் கொண்டே நிதானமான குரலில் கூறினார் :

''ஆமாம், தம்பி! அப்படித்தான் நடந்தது. ஆனால் விபரீதம் ஒண்ணுமில்லே. அப்போது நான் வீட்டிலும் இல்லே. நர்சிங்ஹோமில் இருந்தேன். அதுவும் ஒரு வகையில் நல்லதாய்ப் போய்விட்டது.''

கேட்ட கேள்விக்கு மட்டும் அவர் நாசூக்காகப் பதில் சொல்லி நிறுத்தி விட்டதால், மேற்கொண்டு கேட்கத் துணிவு வராதவனாய், வேறு எப்படிச் சுற்றி வளைக்கலாம் என்ற யோசனையில் ஆழ்ந்தான் நரசு.

நேற்று நடந்த அச்சம்பவத்தை நினைவுகூர்ந்ததன் விளைவாக, அதில் உள்ள நியாயமற்ற கூறுகளை இப்போது சிந்திக்கத் தொடங்கி, அதன் காரணமாய் மனச் சஞ்சலம் அடைந்தவர் போல் முகம் வாடிக் காணப்பட்டார் வேதமூர்த்தி. ''ஏன் தம்பி, அந்த அசம்பாவிதம் இங்கே எதற்காக நடந்ததுன்னு கேட்கலியே? நீங்க கேட்பீங்கன்னு எதிர்பார்த்தேன்!'' என்று சிரித்துக் கொண்டே சொல்லி விட்டுச் சிறுபொழுதுக்குப்பின் ஏதோ ஒரு முடிவுக்கு வந்து அவரே பேச்சைத் தொடர்ந்தார்:

''நீங்களும் அதைத் தெரிஞ்சுக்கறது நல்லதுதான். அதாவது.... நான் ரொம்பக் காலமாக நடத்திக்கிட்டு வந்த 'கிரிஸ்டல் போட்டோ ஜ்வல்லரி' என்கிற ஸ்தாபனத்தைத் தங்கக் கட்டுப்பாடு சட்டம் வந்த காரணத்தால் மூட வேண்டியதாகிவிட்டது. இது ஐந்தாறு வருஷங்களுக்கு முன்னால் நடந்தது. அப்போ என் நண்பர்கள் சிலர் சுண்ணாம்புக் கலவையாலான பெரிய பெரிய குழாய்கள் உற்பத்தி செய்யற கம்பெனி ஒன்றை ஆரம்பிக்க முயற்சி பண்ணிக்கிட்டு இருந்தாங்க. என் கிட்டேயும் வந்து பிராஸ்பெக்டஸைக் கொடுத்தாங்க. எனக்கென்று இருந்த ஒரு தொழிலே நிறுத்தி விட்டதால், வேறு ஏதாவது வருமானத்துக்கு வழி பண்ணணுமேன்னு என் கையில் ரொக்கமாயிருந்த பணத்துக்கு அந்தக் கம்பெனியின் பங்குகளைக் கொஞ்சம் கணிசமாகவே வாங்கிப் போட்டேன். இதனாலும், எனக்கு இங்கே ஓரளவு அரசியல் செல்வாக்கு உண்டு என்பதாலும் என்னை அந்தக் கம்பெனியின் டைரக்டர்கள், போர்டு அங்கத்தினர்களில் ஒருத்தனாகத் தேர்ந்தெடுத்துக்கிட்டாங்க. எனக்கென்னமோ ஆதியிலேயே இது பிடிக்கலே. மறுக்கவும் முடியலே. சும்மா, பட்டும் படாமல் இருந்துக்கிட்டேன். ஏதோ, வருஷத்தில் ரெண்டொரு தடவை நடக்கிற டைரக்டர்கள் மீட்டிங்குக்குக்கூடச் சரியாய்ப் போறதில்லே. ஆனால் கம்பெனி நல்லாவே நடந்துக்கிட்டு வந்தது. வருஷா வருஷம் பங்குதாரர்களுக்கு நல்ல டிவிடெண்ட் தொகையும் கிடைக்க ஆரம்பிச்சது. இந்த நிலைமையிலேதான் கடந்த நாலு நாட்களா அந்தக் கம்பெனித் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் ஆரம்பிச்சிருக்கிறாங்க. அதன் காரண காரியங்கள், நியாய அநியாயங்கள் கூட எனக்கு ஒண்ணும் சரி

யாகத் தெரியாது. அப்படி யிருந்தும் அந்த நிறுவனத்தின் நிர்வாகத்திலே ஒரு சம்பந்தமும் இல்லாத என்னை — அதன் டைரக்டர்கள் போர்டு அங்கத்தினர் என்ற ஒரே காரணத்துக்காக — எதிரியாய்ப் பாவிச்சு, என் வீட்டிலே புகுந்து கலாட்டாப் பண்ண முயற்சி செய்திருக்காங்க. இந்த அறியாமையை நான் எங்கே சொல்லி அழறது?''

சட்டென்று பேச்சை நிறுத்திவிட்டுச் சிரித்துக் கொண்டே எழுந்தார் வேத மூர்த்தி. ''தம்பி ரொம்பக் களைப்பாக இருக்கிறதாத் தெரியுது! கொஞ்சம் ஓய்வு எடுத்துக்குங்க. அப்புறம் பேசலாம். நிறையப் பேச வேண்டியிருக்குது'' என்று சொல்லி விட்டு அவ் வறையிலிருந்து பக்கத்து அறையை நோக்கி நடந்தார்.

நரசுவின் மனம் உடனே திருமலையைப் பற்றி எண்ணமிடத் தொடங்கியது. அவன் தன்மீது சந்தேகம் கொண்டது எவ்வளவு நியாயம் என்பதை இப்போது உணர்ந்தான். அதைத் தொடர்ந்து, அவனுடைய தங்கை கண்ணம்மாவைப் பற்றிய பரிதாபச் செதியும் நினைவுக்கு வந்துவிட, அங்கு உட்காரவே முடியாமல் நெளிய ஆரம்பித்து விட்டான். (தொடரும்)

## திணற அடிக்கும் கேள்விகள்

அமெரிக்காவில் கலிபோர்னியா நகரத்துக் கருகிலுள்ள ஒரு பள்ளி. பூகோள வகுப்புக்காக டெலிவிஷன், திரைப்படம் ஆகிய நவீன வசதிகளோடு அந்த வகுப்பை நடத்த ஆசிரியை காத்திருந்தார். ''இன்று பூகோள பாடம். பூமியைப் பற்றி!'' என்று கூறிவிட்டு ஒரு பட்டனை அழுத்தினார் ஆசிரியை. பூமியைக் காட்டும் வரை சித்திரம் திரையில் தோன்றியது.

அப்பொழுது லிண்டா என்ற பெண் எழுந்திருந்து, ''மிஸ் டோரத்தி! நான் ஒரு கேள்வி கேட்கலாமா?'' என்று



கேட்டாள். ''ஓ! எந்தச் சந்தேகமும் தெளிவிக்கத் தானே நான் இருக்கிறேன்!'' என்றார் மிஸ் டோரத்தி.

''நீங்கள் காட்டிய பூமியின் எடை என்ன?'' இது வரை பூகோள வகுப்பில் யாரும் கேட்டிராத வினோதக் கேள்வியை லிண்டா கேட்டு விட்டாள்.

ஆசிரியர் டோரத்தி சரியான விடையை அடுத்த நாள் நூலகத்தில் தெரிந்து கொண்டு வந்து சொல்வதாக அறிவித்தார். அன்று முழுவதும் நூலகத்தைக் குடைந்து லிண்டா கேட்ட கேள்விக்குச் சரியான விடையைக் கண்டு பிடித்த பிறகுதான் டோரத்திக்குத் தூக்கம் வந்தது. பூமியின் எடை 6,592,000000000000000000 டன் என்று அடுத்த நாள் வகுப்பில் டோரத்தி வந்து லிண்டாவுக்குப் பதில் அளித்ததும் தான் திருப்தி கண்டாள்.

உடனே லிண்டா, ''மிஸ் டோரத்தி! இது மனிதர்கள் எடையையும் சேர்த்தா? அல்லது இல்லாமலா?'' என்று அடுத்து ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டாள். மிஸ் டோரத்தி இதற்கு என்ன பதில் சொல்வதென்று திகைத்தாள்.

(அமெரிக்காவில் குழந்தைகள் ஆசிரியைகளைக் கேள்வி கேட்டு மடக்குவதை நேரில் கண்டு அதிசயித்தவர்: தமிழகக் கல்வி இயக்குநர்.)

## "நான் இருக்கிறேன்!"

ஒரு பேராசிரியர். அவருக்கு நாற்பது வயதுக்கு மேலாகிவிட்டது. எதற்கெடுத்தாலும் கம்ப்யூட்டரை 'கன்சல்ட்' பண்ணுவது அவருக்கு வழக்கமாகி விட்டது. தம் வாழ்க்கைத் துணைவியைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பையும் அந்தப் பேராசிரியர் அந்தக் கம்ப்யூட்டரிடமே விட்டு விட்டார்.

அநேக பெண்மணிகளைப் பற்றிய குறிப்புக்களை அவர் கம்ப்யூட்டரில் செலுத்தி அதனிடம் யோசனை கோரினார்! 'இவள் உமக்குத் தகுந்தவள் அல்ல' 'இவள் செலவை உம்மால் ஈடுகட்ட முடியாது!' என்று அத்தனை பெண்களையும் நிராகரித்துவிட்டது கம்ப்யூட்டர்.

''என்ன இது! எல்லாப் பெண்மணிகளையும் நிராகரித்து விட்டாயே. என் வாழ்க்கைத் துணைவிக்கு என்ன செய்வது?'' என்று துயரக் குரலில் வினவினார் பேராசிரியர்.

''நான் இருக்கிறேனே!'' என்று கூசாமல் பதிலளித்தது கம்ப்யூட்டர்.

[கல்வி இயக்குநர் திரு சிட்டிபாபு அமெரிக்கத் தகவல் நிலையத்தில் ஆற்றிய உரையிலிருந்து. தகவல்: பி.எஸ்.எம்.]

"முஷ்டாக் அலி திரும்பி வரமாட்டாரா?" என்று அந்நாள் கிரிக்கெட் ரசிகர்களுக்கு ஏக்கம். முஷ்டாக் அலி சமீபத்தில் சேப்பாக்கம் மைதானத்துக்கு வந்தார்; கிரிக்கெட் ஆடுவதற்காக அல்ல, பல இளம் 'முஷ்டாக்'களுக்குப் பயிற்சி அளிப்பதற்கு !

"1952ம் வருஷம். சேப்பாக்கம் மைதானத்தில் ரசிகர்களை முஷ்டாக் அலி நன்றாக ஆடி மெய் மறக்க வைத்தார்; அடிபட்டு ரசிகர்கள் மெய் துடிக்கவும் வைத்தார்! இந்தியாவின் முதல் டெஸ்ட் வெற்றி அன்று தான் கிடைத்தது!" என்று அந்நாளைய 'வெற்றி'யை நினைவுகூருகிறார் தமிழக கிரிக்கெட் சங்கக் காரியதரிசி திரு ஸ்ரீ ராமன்.

"முஷ்டாக் அலி நம் மண்ணில்தான் பிரமாதமாக ஆடினார் என்றில்லை. இங்கிலாந்தில் 1936 டூரில் ஆங்கிலேயர்களே அசந்து போகும்படி முஷ்டாக் ஒரு மாட்சில் மூன்று சிக்ஸர்களும் பத்து பவுண்டரிகளும் அடித்ததுடன் 140 ரன்கள் எடுத்து ஆயிரம் ரன்கள் பூர்த்தி செய்ததை மறக்க முடியுமா?" என்று அதிசயிக்கிறார் திரு பட்டாபிராமன்.

## பிரிட்டனுக்குப் பறக்கும் பள்ளி மாணவர்கள்



கிரிக்கெட் மன்னர் முஷ்டாக்கிடம் திரும்பி, "இன்றைய சென்னை எப்படி இருக்கிறது?" என்று வினவுகிறோம்.

"சென்னை முன்பு பார்த்ததற்கு ரொம்பவும் மாறியிருக்கிறது. ஆனாலும் என்னைக் கிரிக்கெட் ரசிகர்கள் இன்னும் மறந்துவிடவில்லை! பழைய அன்பை அப்படியே செலுத்துகிறார்கள். சென்னையில் நான் விரும்பாதது ஒன்னே ஒன்னு!" என்றதும் திகைத்துத் தலை நிமிருகிறோம். "வேறொண்ணுமில்லே. இந்த வெய்யில்தான்!" என்கிறார்.

"சேப்பாக்கம் பழைய நினைவுகளில் ஒன்றை நினைவுகூர முடியுமா?"

"ஓ! எனக்கு இன்னும் பசுமையாக நினைவிருக்கிறது. நான் ஆடும்போது இங்கே ஒரு மரம் இருந்தது. அதன் அருகேதான் அன்று லேடிஸ் ஸ்டாண்ட். அந்த இடத்தில் நான் 'பீல்டிங்' செய்வேன். அந்நாளில் எனக்கு ஒரே 'கிளாமர்!'" என்று கூறிச் சிரிக்கிறார் முஷ்டாக் அலி.

"லண்டனுக்குச்செல்லும் இளம் கிரிக்கெட் வீரர்களுக்கு நீங்கள் கூறும் அறிவுரை....?"

"பாட்ஸ்மன்கள் பயப்படாமல் பந்தை 'ஹார்டாக'த் தாக்க வேண்டும். நம் கிரிக்கெட் பழம் புகழை நிலைநிறுத்த வேண்டும்!"

தமிழகத்துக்குப் பெருமை, லண்டனுக்குச் செல்லவிருக்கும் பள்ளி இளைஞர்கள் கிரிக்கெட் குழுவுக்குத் தலைமை வகிக்கத் தமிழக ஆட்டக்காரர் பரத் ரெட்டி தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது! இந்த இளைஞர் கிறிஸ்துவக் கல்லூரி உயர்நிலைப் பள்ளியில் எஸ். எஸ். எல். ஸி. தேறி விவேகானந்தாக் கல்லூரியில் பட்டப் படிப்பைத் தொடர விருக்கிறார்.

பதினெட்டரை வயதான பரத் ரெட்டி அனைத்து மாவட்ட ஓட்டப் பந்தயங்களிலும், நீச்சல் போட்டியிலும் மூன்றாண்டுகள் தொடர்ந்து 'சாம்பியன்' பட்டம் பெற்றவர். விக்கெட் கீப்பர் — பாட்ஸ்மன்.

இங்கிலாந்துக்கும் ஆஸ்திரேலியாவுக்கும் முன்பு சென்ற இளம் கோஷ்டிகள் வெற்றி வாகை சூடியிருக்கின்றன. விக்கெட் கீப்பர் — காப்டன் பரத் ரெட்டியிடம் அந்தப் பெருமையைக் 'கோட்டை' விடாது காக்கும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ளது.

முஷ்டாக் அலி, அர்ஜுன் நாயுடு, தாராபூர் ஆகிய மூன்று கிரிக்கெட் விற்பன்னர்களிடம் பயிற்சி பெற்ற 'ஆல்ரௌண்டர்' இளம் கிரிக்கெட் கோஷ்டி லண்டனுக்குப் பறக்கிறது. லண்டனிலிருந்து 'பறந்து' வந்து திரு எம். ஏ. சிதம்பரம் நல்வாசி கூறுகிறார். "வெற்றியோடு திரும்ப வேண்டும்" என்று முஷ்டாக் அலி வாழ்த்துகிறார். பரிசுப் பைகளை 'வெற்றி'க் கரங்களால் வழங்குகிறார். (படம்)

"உங்கள் நம்பிக்கை வீண் போகாது. உங்கள் பயிற்சிக்கும் பங்கம் தேடித் தர மாட்டோம்!" என்கிறார் காப்டன் பரத் ரெட்டி.

தமிழக இளம் கிரிக்கெட்காரர்கள் பாடு இனி யோகம்தான். இன்னும் சில மாதங்கள் தமிழக கிரிக்கெட் சங்கத்தின் ஆதரவில் முஷ்டாக் அலி சென்னையில் தங்கிப் பயிற்சி அளிப்பதற்குத் தமிழக அரசு சார்பில் திரவிய சகாயத்துக்குப் பச்சைக் கொடி காட்டியிருக்கிறார் கல்விக் காரியதரிசி திரு திரவியம்.

இன்னும் பல இளம் 'முஷ்டாக்'குகள் உருவாக வழி பிறந்திருக்கிறது. — குண்டுமணி

மலைச் சாரலில் உள்ள கிராமம் ஒன்றில் சுவாங்க் என்ற பெயருள்ள ஒரு குடியானவன் வசித்து வந்தான். அவன் கடுமையான உழைப்பாளி. அவன் உழைப்பு அவ்வளவும் விழலுக்கு இறைத்த நீர் ஆயிற்று. காரணம், விளைச்சலில் பெரும் பகுதி மன்னனின் வரிப் பணமாகக் கஜானாவைச் சரண் அடைந்தது. எனவே, அவனும் என்ன முயன்றும் திருமணம் செய்துகொள்ள முடியவில்லை.

அவன் நண்பர்கள் பேச்சுக்குப் பேச்சு சொல்லிக் காட்டுவார்கள்: ''அரசனிடம் செல்வம் மலையாகக் குவிந்திருக்கிறது. சுவாங்கினிடமோ செப்பால் அடித்த சல்லிக் காசுகூடக் கிடையாது. அரசனது அரண்மனையில் அரசிகளின் கூட்டம். ஆனால் சுவாங்குக்கு 'அடியே' என்று கூப்பிட ஒரு மனைவி கிடையாது.''

இதைக் கேட்டுச் சுவாங்க் மனம் உடைந்தான். ஆனால் அந்தப் பேச்சிலிருந்து அவனால் விடுபட முடியவில்லை. வாட்டமே உருவாகி விட்ட அவன் மீது ஓர் ஓவியனுக்கு இரக்கம் பிறந்தது. அவன் ஓர் அழகியின் ஓவியம் வரைந்து சுவாங்கினிடம் கொடுத்தான், ஒரு பெண்ணின் படத்தையாவது வீட்டுச் சுவரில் மாட்டி வைக்கட்டுமே என்று!

சுவாங்க் சித்திரப் பாவையை உளமார நேசிக்கலானான். மறுநாள் வயல் வேலைக்குப் புறப்பட்ட பொழுது அந்தப் பாவையைப் பார்த்து நீண்டதொரு பெருமூச்சுவிட்டான். அந்தப் பெருமூச்சோடு தன் ஏக்கத்தையும் கொட்டினான்:

''நீ அழகில் சிறந்ததொரு பெண்ணாகி எனக்கு உணவு தயாரித்துப் படைத்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!''

வயல் வேலைகளை முடித்துக் கொண்டு மாலை வீடு திரும்பியவன், தன் வீட்டு அடுக்களையில் புகை மூட்டத்தைக் கண்டு வியந்து போனான். வீட்டுக்குள்ளே நுழைந்தவனுக்கு வேறு ஒரு வியப்பும் காத்திருந்தது. சுடச் சுடச் சுவையான உணவு தயாராயிருந்தது. குடியானவன் கைகால் கழுவிவிட்டு வயிறு முட்டச் சாப்பிட்டான். அவன் ஆவலுடன் அப்படி உணவருந்துவதைக் கண்டு சித்திரப் பாவை சிரித்துக் கொண்டிருந்தாள். ஆனால் அதை அவன் கவனிக்கவில்லை.

□ **தன்னலமற்ற பணி செய்பவர்களை உலகம் எப்படி வாழ்த்தி வழிபடும் என்பதை இந்தச் சீன நாடோடிக் கதை சிறப்பாக எடுத்து ஓதுகிறது. அதோடு கதை சொல்லும் திறனில் நாடோடிக் கதைக்கு ஈடு இணை கிடையாது என்பதையும் காட்டுகிறது.**

# சித்திரப் பாவை



மறுநாள் வேலைக்குப் புறப்படும்பொழுது, தனது கிழிந்துபோன கோட்டை மூலையில் மாட்டிவிட்டு, "நேற்று என்மேல் இரங்கி யாரோ சமைத்து வைத்திருந்தார்களே, அது போல் இன்று இந்தக் கோட்டைத் தைத்து வைத்தால் எவ்வளவு உபகாரமாயிருக்கும்?" என்று கூறிக் கொண்டே சென்றான்.

அன்று அவன் வேண்டுமென்றே சற்றுச் சீக்கிரமாக வீட்டை அடைந்தான். சாளரத்தின் வழியே உள்ளே எட்டிப் பார்த்தான். அழகில் சிறந்த பெண் ஒருத்தி அவன் கிழிந்த கோட்டைத் தைத்துக் கொண்டிருந்தாள். அதைக் கண்டதும் சுவரில் மாட்டியிருந்த படத்தில் அவன் பார்வை பாய்ந்தது. படம் வெற்றுக் காகிதமாகக் காட்சி தந்தது. சித்திரப் பாவைதான் நிஜப் பெண்ணாக உட்கார்ந்திருக்கிறாள் என்பதை அறிந்தவன் ஓரே ஓட்டமாக உள்ளே ஓடினான். பைக்கென்று பாய்ந்து அவள் கரங்களைப் பற்றிக் கொண்டு, "ஆண்டவன் மேல் ஆணை! மீண்டும் சித்திரத்துக்குள் திரும்பிப் போகாதே!" என்று வேண்டினான்.

பெண் நாணிக் கோணி நின்றாள். "நீ மிகவும் நல்லவனாயிருக்கிறாய். அதனால் உன்னோடு வாழ்வதாகவே தீர்மானித்துவிட்டேன்!" என்றாள்.

சுவாங் மகிழ்ந்து போனான். சித்திரமில்லாத வெற்றுக் காகிதத்தைச் சுவரிலிருந்து எடுத்துப் பெட்டிக்குள் மடித்துப் பூட்டி வைத்தான். அவர்கள் இருவரும் அடுப்புத் தீக்கருகில் அமர்ந்து, கணவன் மனைவியாக வாழ்வதென்று ஆணை மேற்கொண்டனர்.

அந்தப் பெண் வெகு கெட்டிக்காரி. வீட்டு வேலையில் மிகச் சிக்கனத்தைக் கையாண்டாள். அவள் அழகில் மனத்தைப் பறிகொடுத்த அனைவரும் அவளுக்குச் சித்திரப் பாவை என்று பெயர் சூட்டியே மகிழ்ந்தனர். சுவாங் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தான்.

ஒரு நாள் சித்திரப் பாவை வீட்டில் தனியாக இருந்தபொழுது இரண்டு பேர் அழுது கொண்டே அவள் வீட்டு வாசலோடு சென்றனர். அவர்களை அழைத்து அழுகையின் காரணத்தைக் கேட்டாள் சித்திரப் பாவை.

அவர்கள் இருவரும் அரசாங்க வேடுவர்கள். அரசருக்காக மணிப் புறா பிடிக்கப் புறப்பட்டிருந்தனர். அரசருக்குப் புறாக் கறி என்றால் மிகவும் பிடிக்கும். ஆனால் இன்று எவ்வளவு முயன்றும் அவர்களுக்குப் புறாவே கிடைக்கவில்லை. அரசர் வெறுங் கையோடு போனால் தலையைச் சீவி விடுவார். இதற்காகவே அவர்கள் அழுது கொண்டிருந்தார்கள்.

"இவ்வளவுதானே?" என்று கேட்ட சித்திரப் பாவை, "சற்றுப் பொறுங்கள். உங்களுக்கு நான் உதவுகிறேன்!" என்றாள். பிறகு உள்ளே சென்று காகிதங்களைக் கத்தரித்துப் புறாக்கள் பண்ணினாள். பிறகு மந்திரம் ஓதி உயிருள்ள வண்ணப் புறாவாக உருவாக்கி அவர்கள் கையில் தந்தாள். வேடுவர்கள் மகிழ்ச்சி பொங்க விடைபெற்றுச் சென்றனர்.

அரசனுக்கு அந்தப் புறாக்கள் அற்புதச் சுவையுள்ளவையாகப்பட்டன. எனவே, தன் கால்நடை அமைச்சரைச் சித்திரப் பாவையிடம் அனுப்பி, "தினமும் இதே போல் இரண்டு புறாக்கள் அரண்மனைக்கு வந்து சேர வேண்டும்" என்று உத்தரவு பிறப்பித்தான்.




"அனுப்பி வைக்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை!" என்றாள் சித்திரப் பாவை.

"என்ன?"

"அரசர் இந்த ஏழைக் குடியானவனிடம் வரி வசூலிப்பதை நிறுத்திவிட வேண்டும்!" என்றாள்.

அமைச்சர் அவளது நிபந்தனையை ஏற்றார்.

மறுநாள் காலை சித்திரப் பாவை சுவாங்கின் கையில் இரு காகிதப் புறாக்களைக் கொடுத்து அரசனிடம் அனுப்பி வைத்தாள். அவன் அரண்மனைக்குச் சென்று புறாக்களைப் பையிலிருந்து வெளியே எடுத்தான். அவை விர்ரென்று பறந்தன. கால்நடை அமைச்சரும் மற்ற அதிகாரிகளும் தாவிக் குதித்து வெகு சிரமப்பட்டு எப்படியோ அவற்றைப் பிடித்தனர்.

அரசனுக்குக் கோபம் வந்தது. "இந்தக் காட்டான் அரண்மனைக்குள் எதற்கு நுழைந்தான்? நாளை முதல் இவன் மனைவியே புறாக்களைக் கொண்டு வர வேண்டும் என்று சொல்லு!" என்றான்.

மறு நாள் சித்திரப் பாவை அரண்மனைக்கு வந்தாள். அரசன் அவள் அழகில் மயங்கினான். "இத்தனை அழகாயிருக்கும் நீ ஒரு சாதாரணக் குடியானவனின் மனைவியாக இருந்து கொண்டு ஏன் கஷ்டப்பட வேண்டும்? மகாராணியாகி என் அரண்மனையை அலங்கரிக்க வந்துவிடேன்!" என்றான்.

"என் கணவர் உம்மைக் காட்டிலும் எவ்வளவோ நல்லவர். நான் அவரை விட்டுப் பிரிய விரும்பவில்லை!" என்று முகத்தில்










அடித்தாற்போலப் பதில் சொன்னாள் சித்திரப் பாவை. அடுத்த கணம் அங்கு நில்லாமல் வெளியேறினாள். அவளைத் தடுத்து நிறுத்த யாருக்கும் துணிவு ஏற்படவில்லை.

அரசனுக்கு ஆத்திரம் மூண்டது. அவன் சுவாங்குக்குச் சொல்லி அனுப்பினான். தன்னோடு குதிரைப் பந்தயத்தில் பங்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும், யார் வெற்றி பெறுகிறார்களோ, அவருக்கே சித்திரப் பாவை மனைவியாக வேண்டும் என்றும் கூறினான்.

சித்திரப் பாவை சிறிதும் சித்தம் கலங்கவில்லை. அவள் சுவாங்கினிடம், ''கவலைப் படாதே! நிச்சயம் உனக்கே வெற்றி கிட்டும்!'' என்றாள். பிறகு மூங்கிலையும் காகிதங்களையும் பயன்படுத்தி ஒரு வெள்ளைக் குதிரை தயாரித்தாள். தன் மந்திர சக்தியினால் அதற்கு உயிரும் கொடுத்தாள்.

மறுநாள் பந்தயம் நடந்தது. அரசனின் கறுப்புக் குதிரை விரைந்து முன்னேறியது. அவன் சுவாங் மீது வெறுப்பை உமிழ்ந்தான். ஆனால் வட்டத்தைச் சுற்றி முடிவை நெருங்கிய பொழுது, சுவாங்கின் குதிரை ஒரே பாய்ச்சலில் அரசனது குதிரையை முந்தி வெற்றி வாகை சூடி நின்றது. மக்கள் மகிழ்ச்சியில் கரவொலி எழுப்பினர்.

அரசனுக்குக் கோபம் இன்னும் அதிகமாகியது. அவன் சுவாங்கிடம் சொன்னான்: ''படகுப் போட்டி நடத்துவோம். அதில் நீ வெற்றி கண்டால் சித்திரப் பாவை உன் மனைவியாக இருக்கலாம். இல்லாவிட்டால்... எனக்கு உரிமை ஆவாள்!''

சுவாங்கும் அவன் மனைவியும் இரவு முழுதும் கண் விழித்துத் தேக்கு மரத்தில் ஒரு படகு செய்தார்கள். அதன் பின்பகுதியை உருக்கைப் போல் கடுமையாகவும் கூர்மையாகவும் சமைத்தார்கள்.

மறு நாள் சுவாங்கின் படகு முன்னே விரைந்து சென்று விட்டது. அரசனிடமோ ஒரு சின்னக் கப்பலே இருந்தது. 'சுவாங்கின் படகில் மோதி அதை மூழ்க அடித்துவிட்டால் என்ன?' என்று அரசன் கெடுமதி கொண்டான். ஆனால் கப்பல் படகின் கடுமையான கூர்மையான பகுதியில் மோதினது தான் தாமதம்; சுக்குநூறாக உடைந்தது. அரசன் ஆற்றில் விழுந்துவிட்டான். அமைச்சர்கள் அரும் பாடுபட்டு அவனை நீரில் மூழ்கிச் சாகாமல் காப்பாற்றிக் கரையேற்றினர்.

அரசன் சுவாங்கைக் கடிந்தான். ''நீ எனது அரச உடையைப் பாழடித்து விட்டாய். ஒரு புதிய உடை கொண்டு வந்து கொடு. அது பறவைகளின் இறகுகளினால் நெய்யப்பட்டிருக்க வேண்டும். அதில் மலைப் பாம்பு, கடல், சூரியன் ஆகியவை வரைந்திருக்க வேண்டும். அதுவும் அந்த உடை மூன்று நாட்களுக்குள் தயாராகி வர வேண்டும். இல்லாவிட்டால் உன் தலையைக் கொய்துவிடுவேன்!'' என்றான்.

இதைக் கேட்ட சித்திரப் பாவை கலங்கி நின்ற சுவாங்கினிடம் சிறிதும் கலக்கமே காட்டிக் கொள்ளாமல் ''காகிதப் பறவைகள் செய்யும் விஷயத்தில் நீ எனக்கு உதவிக் கொண்டே இருக்க வேண்டுமே!'' என்றாள்.




## எண்ணெய் ஸ்நானம் அவசியமா?

எண்ணெய் ஸ்நானம் உடலுக்குக் குளிர்ச்சி என கருதுகிறோம். ஆனால் எண்ணெய் ஸ்நானம் என்றாலே சோம்பலாக இருக்கிறது. செய்த பிறகு, உடல் சற்று நெகிழ்ச்சி அடைகிறது. எண்ணெய் பிசுக்கு வேறு! சிலருக்கு உடல் சிறிது உஷ்ணமடைகிறது. இது போன்ற தொல்லைகள் ஏதுமின்றி எண்ணெய் ஸ்நானத்தின் பலனைவிட அதிக பலன் பெற உங்களுக்குத் தேவை:

**சாந்தி கூலிங் பவுடர்**

இது ஒரு ஆயுர்வேத தயாரிப்பு. இதை வாரம் ஒரு முறை அல்லது இரு முறைகள் தேய்த்துக் குளித்தால் உங்கள் மூளை, கண்கள் மற்றும் உடல் முழுதுக்கும், குளிர்ச்சியளிக்கிறது. மேலும் உடலுக்கு ஆரோக்கியம், சுறு சுறுப்பு; நாள் முழுதும் நறுமணம் அளிக்கிறது. இரவில் நல்ல தூக்கம்.

உபயோகிக்கும் முறை: ஒரு டீஸ்பூனோ அல்லது தேவைக்கேற்ப 2/3 டீஸ்பூன்கள் எடுத்து சிறிது நீரில் குழைத்து தலை மற்றும் சிறிது உடலுக்கும் தேய்த்து சில நிமிடங்கள் ஊறிய பிறகு குளித்து விடலாம். சோப்பு ஷாம்பு ஏதும் தேவையில்லை.

கிடைக்குமிடங்கள்: ஸ்பென்ஸர் & கோ, பார்மஸிகள், சூப்பர் மார்க்கெட்டுகள் மற்றும் எல்லா கடைகளிலும் கிடைக்கும்.

தயாரிப்பாளர்கள்:
**சாந்தி ப்ராடக்ட்ஸ்**
''சாது கிரகம்''
59, முண்டகண்ணி அம்மன் கோவில் தெரு, மைலாப்பூர்,
சென்னை-600004.





தோற்றம் : 11-2-1907
மறைவு : 19-7-1972

## முதல் ஆண்டு நினைவு நாள்

### அமரர் டி. கே. ரெத்தினசாமி

ஸ்தாபகர்

### யங் இந்தியா இண்டஸ்ட்ரியல்ஸ்

பேக்கரி மிஷினரி தயாரிப்பாளர்கள்
பேக்கரி உரிமையாளர்கள் சங்கம்
போன் : 5579, 4924

அஞ்சாது வாழ்வில் அயராது உழைத்து
வற்றாத தொழிற் செல்வத்தை பாங்காய்

கொடுத்த வள்ளலே, பாரில் புகழுடனே
தொழிலும் வர்த்தகமும் பண்புடன் நடத்திய

மாமேதையே நெஞ்சிருக்கும் வரை
உன் நினைவிருக்கும் இந்நாளில் உங்கள்

வழியில் சென்று நின்நாமம் நீடுவாழ
செலுத்துகிறோம் அஞ்சலி.

*உங்கள் பிரிவால் என்றும் உம் நினைவில் வாடும்*
*சகோதரர்கள், மனைவி, மக்கள், தொழிலாளர்கள்*

யங் இந்தியா இண்டஸ்ட்ரியல்ஸ்
யங் இந்தியா பிஸ்கட்ஸ் } 55, கீழப் புதூர், திருச்சி-1
யங் இந்தியா எண்டர்பிரைசஸ்
யங் இந்தியா ஸ்டோர்ஸ், 282, பெரிய கடை வீதி, திருச்சி-8

# ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும் ஏற்படும்போது வெட்கப்படுங்கள்...
# அல்லது



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்

ஷேவிங் வேண்டாம். அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய நளினமான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம். மென்மையான ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர்- இந்த க்ரீமை வேண்டாத ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது... வாரக்கணக்கில் பட்டுப்போல் மென்மை-தொட்டுப் பார்த்தால் மழமழப்பு... பெண்மையின் நளினத்தைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு: ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!



**ஆன் பிரெஞ்ச்** ஹேர் ரிமூவர்
அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்




2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffrey Manners & Co. Ltd.

III HR 172 Tam

பறவைகள் உருவாகியவண்ணம் இருந்தன. சித்திரப் பாவை அவற்றை வானத்தில் பறக்க விட்டுப் பாடிக் கொண்டிருந்தாள் !

**"சின்னஞ்சிறு சிட்டுகளே!**
**சிறகடித்துச் செல்லுங்கள்!**
**செல்லும்போது இறகு இரண்டு**
**விட்டுச் செல்லுங்கள்!"**

மாலை மயங்குவதற்குள் ஆயிரக்கணக்கான பறவைகள் வானத்தில் பறக்கலாயின. அதனால் சந்திரனின் நிலவொளிகூடச் சற்று மங்கி விட்டது. அப்புறம் அழகழகான பல்வகைச் சிறகுகள் பூமியில் விழலாயின.

சுவாங்கும் சித்திரப் பாவையும் அந்தச் சிறகுகளை ஆய்ந்து நூல் நூற்றனர். அந்த நூலால் துணி நெய்தனர். அதில் அவர்கள் மலைப் பாம்பு படமும் வரைந்து முடித்து விட்டனர். ஆனால் மூன்றும் நாள் மாலைக்குள் அவர்களால் கடலையும் சூரியனையும் வரைய முடியவில்லை. சுவாங் பயந்து போய் அழலானான். அவன் கண்ணீர் ஆடையில் விழுந்தது; அது கடலாகியது.

சித்திரப் பாவை கடுமையாக உழைத்ததனால் அவளது விரல்களிலிருந்து இரத்தம் கசியலாயிற்று. அந்த இரத்தம் உடையில் விழுந்தது. அது சூரியனாகியது. இப்படியாக அவர்கள் மேற்கொண்ட வேலை முடிந்தது. அவர்களுக்கும் உயிர் வந்தாற்போலிருந்தது.

அரசன் புத்தாடையைக் கண்டு மகிழ்ந்தான். அப்பொழுதும் சித்திரப் பாவையைத் தன் உரிமையாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை அவனைவிட்டு அகன்றபாடில்லை. எனவே, வெகு தந்திரமாக, "இது போன்ற உடை ஒன்றை என் கண் முன்னேயே நீ செய்து தர வேண்டும்!" என்றான்.

சித்திரப் பாவை, "ஒன்றென்ன, ஒன்பது செய்து தருகிறேன். முதலில் இந்த உடையை அணிந்து பாருங்கள்!" என்றாள்.

அரசன் வெகு கர்வத்துடன் அந்தப் பகட்டான உடையை அணிந்து மகிழ்ந்தான். அதே நேரத்தில் சித்திரப் பாவை அதில் மந்திரம் ஓதி ஊதினாள்.

உடையிலிருந்த கடலில் புயல் எழுந்தது. ஆள் உயரத்துக்கு அலை புரண்டு கொந்தளித்தது. கால்நடை அமைச்சரும் மற்றவர்களும் அரசனைக் காப்பாற்ற விரைந்தனர். ஆனால் கொடுங்கோல் மன்னன் அந்த அலை கடலில் மூழ்கிச் செத்தொழிந்தான்.

சுவாங்கும் சித்திரப் பாவையும் அரசன் வலுக் கட்டாயமாக மணம் புரிந்து அடிமைகளாக அடைத்து வைத்திருந்த பெண்கள் அனைவருக்கும் விடுதலை வழங்கினர்.

ஒரு பெரிய நல்ல காரியம் செய்துவிட்ட மகிழ்ச்சியில் கடற்கரையில் நின்றவண்ணம் அவர்கள் வான வீதியை நோக்கினர். பல வண்ணப் புள்ளிகள் அதில் பவனி வருவது தெரிந்தது.

ஆம், வானத்தில் பல்லாயிரக்கணக்கில் வண்ண வண்ணப் பறவைகள் சிறகடித்து வட்டமிட்டு வந்தன. அவை பாடிய மகிழ்ச்சி கீதம் இதோ :

**சிறகடித்துப் பறப்போம்!**
**ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்!**
**சித்திரப்பாவை—சுவாங்கை வாழ்த்துவோம்!**
**சரியான ஜோடியாகப் படைத்து**
**இன்பம்வழங்கிய இறைவனை வாழ்த்துவோம்!**

*ஹிந்தியிலிருந்து தமிழாக்கம்:* **அக்ஷயம்**

## இயல்பான உணவு எது?

புலால் உணவு அசுத்தமானது என்பது மட்டுமல்ல. அது முழுமையான உணவுமாகாது. மேலும் மனிதனைப் பொறுத்தவரை அது இயற்கைக்கு மாறுபட்ட உணவு என்பதையும் எளிதில் நிரூபிக்கலாம். அது இயல்பான உணவாக இருக்குமேயானால் கசாப்புக் கடையில் ஒரு துண்டு மாமிசத்தை வெட்டி எடுத்து வாயில் போட்டுக் கொள்ளத் தயங்குவீர்களா? ஆனால் கறிகாய்க் கடையில் ஒரு காயையோ அல்லது பழத்தையோ எடுத்து ருசி பார்க்க யோசிக்கவே மாட்டார்கள். புலால் உணவு இயற்கையான உணவாக இருப்பின், நாய் மாமிசத்தையோ அல்லது பூனை மாமிசத்தையோ, உண்டு பழக்கமில்லை என்ற காரணத்தைச் சொல்லி ஒதுக்க மாட்டார்கள். ஆனால் இதுவரையில் சுவைத்தறியாத ஒரு பழத்தைக் கொணர்ந்து தந்தால் ருசி பார்க்க யாரும் தயங்க மாட்டார்கள். ஒரு பூனைக் குட்டியையும் ஒரு கோழிக் குஞ்சையும் ஓர் அறையில் விட்டு



வையுங்கள். பூனை தனது இயல்பான உணவு என்ன என்பதை உடனே காட்டிவிடும்! கோழிக் குஞ்சு மீது பாய்ந்து அதைத் தின்று விடும்! பூனைக் குட்டிக்குப் பதில் ஒரு குழந்தையை அந்த இடத்தில் விட்டுப் பாருங்கள். அது கோழிக் குஞ்சைத் தின்ன முற்படுமா என்ன? ஆனால் ஓர் ஆப்பிளை அருகில் கண்டால் குழந்தை அதைச் சாப்பிட முயலும். ஏனெனில் அது அதன் இயற்கையான உணவு. இவையெல்லாம் புலால் மனிதனின் இயற்கையான உணவல்ல என நிரூபிக்கின்றன.

-எர்னஸ்ட் க்ராஸ்பி.

'பிராணிகளுக்கான கிறிஸ்து சங்கம்', 'தி லாம்ப்' என்ற பெயரில் ஓர் ஆங்கிலப் பத்திரிகையை வெளியிடத் தொடங்கியிருக்கிறது. கிறிஸ்துவர்கள் மட்டுமல்ல, எம்மதத்தவராயினும் புலாலுணவை ஏற்கலாகாது என்ற சீரிய கொள்கையைப் பரப்புவது இப்பத்திரிகையின் நோக்கம். அதன் முதல் இதழில் இடம் பெற்றுள்ள பல அரிய கருத்துக்களில் ஒன்றே மேலே காண்பது.

விலாசம்: 42, பெல்ஸ் சாலை, சென்னை-600005.

'அட ஜடமே!... ஒன்னைக் கட்டிண்டு அழறதை விட ஓர் உருவத்தைக் கட்டிண்டு மாரடிக்கலாம் தொலே, சீக்கிரம்!' — சுப்புவையர்

'என்னுடன் வந்துவிடு. இந்த மனித நாற்றமே அற்ற இடத்துக்குச் சென்றுவிடுவோம்!' — சர்மா

# கல்யாணி

புதுமைப்பித்தன்

**வா**ணிதாஸபுரம் என்பது ஒரு பூலோக சுவர்க்கம். ஆனால், இந்தச் சுவர்க்கத்தில் ஒரு விசேஷம். மேலே இருக்கும் பௌராணிகரின் சுவர்க்கம் எப்படி இருக்கும் என்று அடியேனுக்குத் தெரியாது. ஆனால் இந்தச் சுவர்க்கத்தைப் பொறுத்தவரை, இது வாணியின் கடைக்கண் பார்வை ஒரு சிறிதும் படாத இடம் என்று எனக்குத் தெரியும்.

வாணிதாஸபுரத்துக்குப் போக வேண்டுமானால், ஜில்லா போர்டு ரஸ்தாவை விட்டு, மாமரம் நிறைந்த வாய்க்கால் கரை மீது அரை பர்லாங்கு நடக்க வேண்டும். ரஸ்தாவின் கீழ்ப் பாரிசத்தில் ஊர். அதன் பக்கத்தில் தான், கிழக்கே பார்த்த சிவன் கோயில் தொடங்கி, பத்துப் பதினைந்து வீடுகள் உள்ள அக்கிரகாரம். பிறகு ஊர்ப் பொட்டல். சற்று வட பாகமாகப் போகும் சந்து, பிள்ளைமார் சந்து. அதற்கப்புறம் மறவர்கள் தெரு. இவ்வளவையும் கடந்துவிட்டால், வேளாளர் தெருவின் தொடர்ச்சியான மறவர் தெருவின் கடைசிக்கு வந்துவிட்டால், வயலும் குளமும். குளம் தடாகமன்று, வெறும் மண் கரையிட்ட ஏரி. சுற்றிலும் கண்ணுக்கெட்டிய வரை கழனிகள். வான வளையத்தைத் தொடும் மூலையில் பச்சை மரங்கள்.

வயல்களின் வழியாக இரண்டு மைல் நடந்தால் நதி. இரு கரைகளிலும் மருத மரமும் பனையும் கவிந்து நிற்கும். அதிலிருந்துதான் ஊரை ஒட்டிப் பாயும் வாய்க்கால் புறப்படுகிறது. வேனிற் காலத்தில் குளத்திலும், வாய்க்காலிலும் ஜலம் வற்றிவிடும். அப்பொழுது விடியற்காலையில் ஸ்நானம் செய்வதை இன்பமாகக் கருதுவோர்கள் வாணிதாஸபுரத்துக்கு வந்தால் இரண்டு மைல் நடையைத் துச்சமாகக் கருதுவார்கள்.

வாணிதாஸபுரம், வஞ்சனைச் சுழலிலும், நியாகப் பெருக்கிலும் செல்லும் நாகரிகத்தின் கறைகள் படியாதது. நாயக்கர்கள் காலத்தில் மானியமாகச் சிலருக்குக் கொடுக்கப்பட்ட காலத்திலிருந்து இன்று வரையில், அழியாத, மாறுதல் இல்லாத, நித்திய வஸ்துப் போல, பழைய பழகிய பாதைகளிலேயே அது ஓடிக் கொண்டிருக்கிறது.

கிராமவாசிகள் உயிர்வாழ்தலைப் பொறுத்த வரை வெளியூருக்குச் செல்ல வேண்டிய அவசியம் கிடையாது, செல்வதுமில்லை. வேண்டியதெல்லாம் சாப்பாட்டுக்கும் துணிக்கும் தானே! உடையைப் பொறுத்தவரை, 'கும்பினியான்' துணி வியாபாரத்தில் அதிக நம்பிக்கை. கிராமவாசிகளுக்கு உலகம் எந்தத் திக்கில் செல்லுகிறது என்ற அறிவும் கிடையாது, அறிய ஆவலும் இல்லை. சனிக்கிழமைச் சந்தைக்கு இலை காய்கறிகளைத் திருநெல்வேலிக்குக் கொண்டு சென்று, விற்று முதல் செய்துவிட்டு, அன்று பன்னிரண்டு மணி நேரத்தில் அரைகுறையாகக் கேட்டதை மறு சனிக்கிழமை வரையில் பேசிக் கொண்டிருப்பதில் திருப்தி அடைந்துவிடுவார்கள் அந்த மகாஜனங்கள்.

கோயில் பூஜை, உபாத்திமைத் தொழில், உஞ்சவிருத்தி என்ற சோம்பற் பயிற்சி—இவைதான் அங்குள்ள பிராமண தர்மத்தின் பிரதிநிதிகளின் வாழ்க்கை இலட்சியம்.





வேளாண்மை என்ற சோம்பல் தொழில் அங்குள்ள பிள்ளைமார்களின் குல தர்மம். மறவர்கள், ஏவின வேலையைச் செய்தல், ஊர்க்காவல் என்ற சில்லறைக் களவு உட்பட்ட சோம்பல் தர்மத்தைக் கடைப்பிடித்தனர்; பறைச்சேரி ஊரின் போக்குடன் கலந்தாலும், அல்லும் பகலும் உழைத்து உழைத்துக் குடித்துப் பேசிப் பொழுதைக் கழித்தது.

ஊருக்கு, கிராம முனிசிப்பு சுந்தரம் பிள்ளை, பண்ணையார் ராமையாப்பிள்ளை, சுப்பிரமணிய பண்டாரம், சிவன் கோயில் அர்ச்சகர் சுப்புவையர் — இவர்கள் எல்லாரும் 'பெரிய' மனிதர்கள். எல்லோரும் ஏகமட்டம்; ஏனென்றால், தற்குறிப் பேர்வழிகள். அவர்களில் 'மெத்தப் படித்தவான்' என்று கருதப்பட்டவரே பிரைமரியை எட்டிப்பார்க்கவில்லை. எழுத்துக் கூட்டி வாசிப்பார்கள்; தமிழ்ப் படிப்புத் தெரியும் என்று கூறுவார்கள். ஆனால் வாழ்க்கைக்கு அவசியமான உலக அனுபவம் உண்டு; 'படித்தவர்'களைப் போல் அவர்கள் வடிகட்டின அசடர்கள் அல்லர்.

## 2

அர்ச்சகர் சுப்புவையர், ஏறக்குறைய மெஜாரிட்டியைக் கடந்துவிட்டவர். குழந்தை குட்டி கிடையாது. தமது நாற்பத்தைந்தாவது வயதில் 'மூத்தாளை' இழந்துவிட, இரண்டாவது விவாகம் செய்து கொண்டவர். இளையாள் வீட்டுக்கு வந்து சிறிது காலந்தான் ஆகிறது. அவள் சிறு குழந்தை. பதினாறு அல்லது பதினேழு வயதுள்ள கல்யாணி. சுப்புவையரின் இரகத்தை மங்களகரமாக்கவே அவரது சமையற்காரியாகக் காலம் கழித்தாள்.

சுப்புவையர் மன்மதனல்லர். அதுவும் ஐம்பது வயதில் ஒருவரும் மன்மதனாக இருக்கமுடியாது விதிவிலக்காக, குசியான பசுமைக்

களுடன் விருந்து சாப்பிடும் யாரும் வயிற்றை ஆலிலை போல் ஒட்டியிருக்கச் செய்ய முடியாது. நரைத்த குடுமியுடன், பஞ்சாங்கத்துக்கு ஒத்தபடி க்ஷவரம் செய்து கொள்வதாகச் சங்கற்பமும் செய்து கொண்டால், நிச்சயமாக எவரும் மன்மதனாக இருக்க முடியாது.

சுப்புவையர் சாதுப் பேர்வழி: கோபி இருண்டு, அவருண்டு. வேறு எந்த ஜோலியிலும் தலையிடுகிறதில்லை. வேளைக்கு வேளை நாவுக்கு ருசியாக உணவு கொடுத்து, தூங்கும்பொழுது கால் பிடித்துவிட்டு, தொந்தரவு செய்யாமலிருப்பதே மனைவியின் லட்சணம் என்று எண்ணுபவர். அதிலும் ஏறக்குறைய இருபது வருடங்களாகப் பழகி, திடீரென்று தன்னை விட்டு விட்டு இறந்து போன மூத்தாள் மீது அபாரப் பிரேமை. அவருக்கு அது பழக்க தோஷம். அவளைப் போல் இனி யார் வரப் போகிறார்கள் என்ற சித்தாந்தத்தில், கல்யாணியின் பாலிய அழகும், சிசுருஷையும் தெரியாது போய்விட்டன.

கல்யாணி — அவளும் ஏழைப் பெண்தான். உபாத்திமைத் தொழில் பார்த்துவந்த சாமிநாத கனபாடிகளின் மகள். அவ்வூரிலேயே பிறந்து. வெகு காலமாக மாமாவென்றும், சித்தப்பா என்றும் அழைத்து வந்த ஒருவரைக் கணவராகப் பெற்றவள். ஏழையாகப் பிறந்தால் அழகாகப் பிறக்கக் கூடாது என்ற விதி இருக்கிறதா? கல்யாணியின் அழகு, ஆளை மயக்கிவிடிக்கும் மோக வாகினியில் பிறந்த காம சொரூபம் அன்று. நினைவுகள் ஓடி மறையும் கண்கள், சோகம் கலந்த பார்வை! அவளது புன்னகை ஆளை மயக்காவிட்டாலும் ஆளை வசீகரிக்கும். அப்படி வசீகரிக்கப்படாதவன் மண் சிலைதான். சுப்புவையரும், அவர் வழிபடும் லிங்க வடிவத்தில் இருக்கும் 'விரிசடைக் கடவுளின்' உருவச் சிலையின் ஹிருதயத் துடிப்பை ஏறக்குறைய பெற்றிருந்தார். கல்யாணி வாலைப் பருவத்தினள். அதிலும் இயற்கையின் பரிபூரண சக்தியும் சோபையும் கொந்தளிக்கும் நிலையில் உள்ளவள். எதற்கெடுத்தாலும் தன்னை மரக்கட்டையாகக் கருதி, இறந்த மூத்தாளின் பெருமையை நினைத்து உருகும் சுப்புவையரின் எண்ணங்களைத் தன் வசம் திருப்புவது என்று கங்கணம் கட்டிக் கொண்டவள்; அதாவது, உள்ளூற அவளறியாமலே இயற்கை அந்த வேலையில் அவளைத் தூண்டியது. அவர் வார்த்தைகள் அவளது வாலிப அழகின்முகத்தில் அடித்தன. அவரைக் கவர்ச்சிக்கக்கூடியபடி யெல்லாம் தனது பெண்மைக் குணங்களைப் பயன்படுத்தினாள். சுப்புவையர் மசிகிற பேர்வழியாகத் தெரியவில்லை. கல்யாணியும் ஒரு பெண்ணாயிற்றே, அவளுக்கும் இயற்கையின் தேவையும் தூண்டுதலும் இருக்குமே என்ற ஞானம் சிறிதும் கிடையாது போயிற்று சுப்புவையருக்கு.

அப்பொழுதுதான் சைத்ரிகரான சுந்தர சர்மா அங்கு வந்தார்.

## 3

அப்பொழுது முன் வேனிற்காலம்.. பனி நீங்கிவிட்டது. வாய்க்காலில் ஜலமும் வற்றிவிட்டது. பயிர்கள் அறுவடையை எதிர்பார்த்துத் தலைசாய்ந்து நின்றன. குளத்தில் நீர் வற்ற இன்னும் இரண்டு மூன்று மாதங்களாகும். ஊருக்குக் குடி தண்ணீர் குளத்திலிருந்துதான். ஆற்றுக்கு நடக்க முடியாதவர்களும், நடக்கப் பிரியமில்லாதவர்களும் குளத்திலேயே ஜலம் எடுத்துக் கொள்வார்கள்.

சுந்தர சர்மா அக்கிரகாரத்தில் ஒரு காலிக் குச்சு வீட்டில் வாடகைக்கு இருந்து கொண்டு சாப்பாட்டுக்குச் சுப்புவையர் வீட்டில் வாடிக்கை வைத்துக் கொண்டார். வரும் பொழுது அவர் மனம் கள்ளமற்ற மத்தியான வானம் போல் இருந்தது. எப்பொழுதும் குளக்கரையிலோ அல்லது வாய்க்கால் கரையிலோ இருந்து கொண்டு, இரண்டு மூன்று மாட்டுக்காரப் பையன்கள் வேடிக்கை பார்க்கச் சித்திரம் தீட்டிக் கொண்டிருப்பது அவரது பொழுதுபோக்கு.

சில சமயங்களில் மத்தியானச் சாப்பாட்டுக்கு வர இரண்டு அல்லது மூன்று மணியாகி விடும். சில சமயம் காலைச் சாப்பாடு இல்லாமலே சென்று விடுவார். வருவது எந்த நேரமென்பதில்லை.

கல்யாணி அவரைத் தனது சகோதரன் போல் பாவித்து வந்தாள். ஆனால், உள்ளம் அவரைக் கண்டவுடன் பயத்தினால் சஞ்சலிக்கும். அவர் வந்து இரண்டு மூன்று நாட்களுக்கு அவருக்குச் சாப்பாடு போடுவதென்றால் வியர்த்து விறுவிறுத்து முகம் வெந்து விடுவாள். காரணம் சர்மா வாணிதாஸபுரத்தினரைப் போல் அல்லாது, சற்று நாகரிகமாகவும், சுத்தமாகவும் உடை அணிந்துகொள்வதுதான். ஆனால் அவரது கிராப்புத் தலை கழுத்து வரை வளர்ந்து மறைத்திருந்தாலும் எப்பொழுதும் சிரிக்கவந்தே முகத்திலும் காதிலும் கிடக்கும். கறுத்த கண்கள் எப்பொழு



தும் எதையோ சிந்தித்துக் கொண்டிருப்பது போல் எதையாவது நோக்கற்றுப் பார்த்துக் கொண்டிருக்கும்.

சர்மா சைத்திரிகராக இருந்தும் கல்யாணியைப் பார்க்காதது ஆச்சரியம் என்று நினைக்கலாம். கனவுகள் அழுந்தும் உள்ளத்தைக் கொண்ட அவர், சுப்புவையரின் இல்லத்தை மறைமுகமான ஹோட்டலாகக் கருதியதினால் சாப்பாடு முடிவது அவர் அறியாமலே நடந்து வந்தது. மேலும் சுப்புவையரின் வீடு ஜன்னல்களுக்குப் பெயர்போனதல்ல. காற்றும் ஒளியும் உள்ளே எட்டிப்பார்க்கக் கூடாது என்று சங்கற்பம் செய்து கொண்ட சுப்புவையரின் மூதாதைகளில் ஒருவரால் கட்டப்பட்டது. பகலில் இருட்டு. இரவில் குத்துவிளக்கின் மங்கலான இருட்டு. சாதாரண காலத்திலேயே எதிரில் வருவது என்னவென்று உணரிற பழக்கமில்லாத சர்மாவுக்குப் புலப்படாமல், இவ்வளவு வெளிச்ச உதவியும் சுப்புவையரின் மனைவியை மறைத்து விட்டது அதிசயமன்று. மேலும் கல்யாணிக்கு அதிகமாக வெளியில் நடமாடும் பழக்கம் கிடையாது. அவள் பொந்துக் கிளி. மேலும் குளம் வாய்க்கால்களுக்குக் கருக்கலிலேயே போய் வந்துவிடுவாள். இதனால் சர்மா கல்யாணியைத் தினம் சந்தித்தாலும் பார்த்தது கிடையாது. அவருக்கு அவளைப் பொறுத்தவரை, உணவு பரிமாறும் கருவளை அணிந்த கைகள் மட்டிலும் தெரியுமோ என்னவோ!

## 4

அன்று சுந்தர சர்மா வருவதற்குச் சாயங்காலமாகிவிட்டது. காலையிலேயே சென்றவர், மத்தியான போஜனத்துக்குக்கூடத் திரும்பவில்லை. வரும்பொழுது நன்றாக இருட்டிவிட்டது. வரும் வழியிலேயே குளத்தில் குளித்துவிட்டு நேராகத் தமது குச்சு வீட்டுக்குச் சென்று உடைகளை மாற்றிக் கொண்டு, சுப்புவையரின் வீட்டை அடைந்தார். அன்று அவருக்கும் பசி.

சுப்புவையர் வெளித் திண்ணையில் உட்கார்ந்திருந்ததால் இவரைக் கண்டதும், ''என்ன அய்யர்வாள் பகல்லே கூடச் சாப்பிடல்லே என்று சொன்னாளே; இப்படியிருந்தா உடம்பு என்னத்துக்கு ஆகும்?.... அடியே, சர்மா வந்திருக்கார், இலையைப் போடு! இன்னும் விளக்கை ஏன் ஏற்றி வைக்கல்லே! நேக்குத் தெரியுமே! அவள் இருந்தால் வீடு இப்படிக் கிடக்குமா? பகவான் செயல்!'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே சென்று குத்து விளக்கின் மேல் இருக்கும் மாடக் குழியில் தீப்பெட்டியைத் தேடினார்.

சமையல் உள்ளிலிருந்த கல்யாணியும் கையில் அகல் விளக்குடன் வந்து குத்து விளக்கை ஏற்றினாள்.

''என்னடி, விளக்கை ஏன் ஏற்றக்கூடாது? இவ்வளவு நேரமும் என்ன பண்ணினே?''

''ஏற்றினேனே! மங்கியிருக்கும் திரியைத் தூண்டாதிருந்து விட்டதினால் அணைந்துவிட்டது; சாதத்தை வடிச்சுண்டிருந்தேன்!'' என்றாள் கல்யாணி.

''சரி, சரி! எனக்குத் தெரியுமே! வீடும் வாசலும் கெடக்கிற கெடையைப் பார்த்தால் நன்றாயிருக்கு. பெருக்கிவிட்டுச் சீக்கிரம் இலையைப் போடு!'' என்றார்.

கல்யாணியின் முகம் சிவந்தது. அந்நியர்கள் முன்பாகவும் இப்படிப் பேசுகிறாரே என்று அவள் உள்ளம் கலங்கியது. 'அவர் என்ன நினைப்பார்!' என்ற நாணம், எல்லாம் சுருக்குச் சுருக்கென்று தைக்கும் வார்த்தைகள், இவை அவள் உள்ளத்தைக் குழப்பி விட்டன. சரேலென்று உள்ளே சென்றுவிட்டாள். அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது.

''இன்று எங்கே போயிருந்தேள்?'' என்று கேட்டார் சுப்புவையர்.

''அணைக்கட்டுப் பக்கம் போயிருந்தேன். வேலை முடிவதற்கு நேரமாகி விட்டது. மத்தியானம் வெய்யிலில் வருவானேன் என்று நினைத்தேன். நாளைக்கு அல்லது மறு நாளைக்குக் கொழுந்து மாமலைப் பக்கம் போகலாம் என்று நினைக்கிறேன். போவதை இப்பொழுதே சொல்லி விட்டால் நீங்கள் காத்திருக்க வேண்டியதில்லையல்லவா?'' என்று சிரித்தார் சர்மா.

இதற்குள் கல்யாணி கதவோரத்தில் நின்று கொண்டு, ''என்ன செய்யறேள்? சொம்பில் ஜலம் வைத்திருக்கிறேன்!'' என்றாள்.

''இந்தாருங்கள், கால் கைகளைக் கழுவிக் கொள்ளுங்கள்!'' என்று சர்மாவிடம் ஒரு செம்பு ஜலத்தைக் கொடுத்துவிட்டுத் தாமும் கால் முகம் கழுவினார்.

இருவரும் உள்ளே சென்று குத்து விளக்கின் முன் போடப்பட்டிருந்த இலைகளின் எதிரே உட்கார்ந்து கொண்டனர்.

அன்று இருவருக்கும் பரிமாறுவதென்றால் பிராணன் போவது போலிருந்தது.

முதலில் சுப்புவையருக்குச் சாதத்தைப் படைத்தாள். கை நடுங்கியதினால் சிறிது சிதறிவிட்டது.

''எனக்குத் தெரியுமே! இப்படிச் சிந்திச் சிதறினால் வாழ்ந்தாற் போலத்தான்! பார்த்துப் போடக்கூடாதா? போதும், போதும்!'' என்றார். பிறகு மனத்துக்குள்ளாகவே, 'அவள் இருந்தால்.... கர்ம பலன்!' என்று முனகிக் கொண்டார். இவ்வார்த்தைகள் கல்யாணிக்குக் கேட்டன. ஏற்கனவே குழம்பிய மனம் மேலும் கலங்கி விட்டது. கைகள் இன்னும் அதிகமாக நடுங்கின.

சர்மாவுக்குப் படைப்பதற்காகக் குனிந்தாள். பதற்றத்தில் தட்டிலிருந்த சாதம் முழுவதும் இலையில் கவிழ்ந்து விட்டது. சர்மா, 'போதும்' என்று இடைமறித்தார். அவரது புறங்கை மீது ஒரு குவியல் மட்டும் தடைப்பட்டு நின்றது. 'போதும்' என்று சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே தட்டிக் கொண்டிருக்கும் பிரகிருதி அசடா, அல்லது அதற்குக் குறும்பா என்று நோக்கினார். அவர் சற்று அண்ணாந்து பார்த்ததும் அவர் எதிர்பார்த்ததற்கு விபரீதமான காட்சி! பயம்,— கூச்சத்திலும், குத்து வார்த்தைகளிலும் ஏற்பட்ட பயம், — என்பது முகத்தில் எழுதி ஒட்டியது போல் மிரண்ட பார்வை!

அவர் பார்த்ததும் அவளுக்கு இன்னும் மிரட்சி அதிகமாயிற்று. அந்தக் குழப்பத்தில் அவர்கள் கைகள் சந்தித்தன. அவள் கண்களில் ஆறுதலை எதிர்நோக்கும் குழந்தையின்

வருத்தம்; அழுகை துடிதுடிக்கும் உதடுகள். ஒரு கணம் இருவரும் ஒரே பார்வையில் அசைவற்றிருந்தனர். மறு கணம் அவள் நிமிர்ந்து திரும்பிப் பாராது வேகமாக உள்ளே சென்று விட்டாள். சர்மாவின் உள்ளத்தில் அது ஒரு விலக்க முடியாத சித்திரமாகப் பதிந்தது.

மறுபடியும் கல்யாணி எத்தனையோ முறை வந்து பரிமாறினாள். ஆனால், ஒரு கணமாவது சர்மாவைப் பார்க்கவில்லை. ஆனால், சர்மா அவளது உள்ளத்தைத் துருவும் பார்வைகளைச் செலுத்தினார். அவை பாறைகளில் பட்ட கல்லைப் போல் பயனற்றுப் போயின. 'காரணம், காரணம்' என்று அவர் உள்ளம் அடித்துக் கொண்டது. சாப்பிட்டுவிட்டுப் பேசாது நேரே தமது ஜாகை வீட்டுக்குச் சென்று, தமது உள்ளத்துடன் போராடிக் கொண்டிருந்தார். அவரது உள்ளம் கல்யாணியைத் தன்னுள் ஐக்கியமாக்கியது. அவளது அழகு சர்மாவின் சைத்திரிகக் கண்களுக்குப் பல நீண்ட காவியங்களாகத் தோன்றிற்று. அன்று இரவு முழுவதும் அவர் தூங்கவில்லை; தமது கனவுகளுடன் போராடிக் கொண்டிருந்தார்.

அன்று சாப்பாடு முடிந்தவுடன், கப்புவையர், வெற்றிலைச் செல்லத்தைக் கையில் எடுத்துக் கொண்டு வெளியே வந்து உட்கார்ந்து கொண்டு வெற்றிலை போடலாம் என்று பெட்டியைத் திறந்தார். வெற்றிலை பாக்கு எல்லாம் இருந்தன. ஆனால் சுண்ணாம்பு மட்டும் காய்ந்து காறைக் கட்டியாக இருந்தது. "ஜடம்" என்று கூறிக்கொண்டே, "அடியே!" என்று உள்ளே தலையை நீட்டிக் கொண்டு கூப்பிட்டார். சமையல் உள்ளில் தனது மனத்துடன் போராடிக் கொண்டிருந்த கல்யாணி, "என்ன?" என்று கேட்டுக் கொண்டே வெளியில் வந்தாள்.

"அட ஜடமே! உனக்கு எத்தனை நாட்கள் சொல்வது — செல்லத்தில் எல்லாம் சரியாயிருக்கிறதா வென்று பார்த்து வை என்று? மூணுவது இல்லையே! அர்த்த ராத்திரியிலே யார் கொடுப்பார்கள்? போய் ஒரு துளி ஜலம் எடுத்துண்டு வா! ஒன்னைக் கட்டிண்டு அழுறதை விட ஓர் உருவத்தைக் கட்டிண்டு மாரடிக்கலாம். தொலை, சீக்கிரம். அவளும் போனாள், குடியும் குடித்தனமும் — எல்லாம் சொல்ல வேண்டியதில்லை!" என்று வைதார்.

கல்யாணி உள்ளே சென்று, ஒரு டம்ளரில் ஜலம் கொண்டுவந்து வைத்துவிட்டு, அவர் பாயையும் தலையணையையும் எடுத்து உதறிக் கூடத்தில் விரித்துவிட்டு, மறுபடியும் உள்ளே சென்றுவிட்டாள்.

அன்று பசி வேறு வரப் போகிறது? அவள் மனம் எங்கெல்லாமோ சுற்றியது. சர்மாவைப் பற்றி அடிக்கடி அவளை யறியாமல் அவள் உள்ளம் நாடியது. ஆனால், தனது கணவர் அந்நியர் முன்பும் இப்படிப் பேசுகிறாரே என்று வருத்தம். ஏங்கி ஏங்கி அழுதாள். அழுகையில் ஓர் ஆறுதல் இருந்தது போல் தெரிந்தது.

மறுபடியும் 'அடியே!' என்ற சத்தம்.

"என்ன?" என்று கேட்டுக் கொண்டே எழுந்து சென்றாள்.

"இன்னும் சாப்பிட்டு முடியவில்லையா? இந்தக் காலைப் பிடி! அப்பா! முருகா! சம்போ சங்கரா!" என்று கொட்டாவி விட்டுக் கொண்டே பாயில் படுத்துக் கொண்டார் கப்புவையர்.

உட்கார்ந்து மெதுவாகக் காலைப் பிடித்துக் கொண்டே யிருந்தாள் கல்யாணி. அவளுடைய கலங்கிய கண்களிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் அவர் முழங்காலில் விழுந்தது.

"என்னடி, மேலெல்லாம் எச்சல் பண்ணுறாய்? ஒரெழவும் தெரியல்லே, என்ன ஜன்மமடா?" என்றார்.

கல்யாணி சற்று நேரம் மௌனமாக இருந்தாள். அவரிடம் ஒன்று கேட்க வேண்டுமென்று துணிச்சல் பிறந்தது.

"பாருங்கோ!" என்றாள்.

"உம், போதும் பிடித்தது!" என்றார் ஐயர்.

அவர் கையை மெதுவாக எடுத்துத் தன் மார்பின் மீது வைத்துக் கொண்டு, "அவாள் முன்னெல்லாம் என்னைப் பேசுகிறீர்களே! நான் என்ன செய்து விட்டேன்!" என்று சிரிக்க முயன்றாள். அவள் புன்னகை பரிதாபகரமாக இருந்தது.

"எதற்காக? உனக்குப் புத்தி வரத்தான்! என்ன சொல்லியும் ஒண்ணும் உறைக்கல்லையே! அவள் இருந்தாளே, ஒரு குறை யுண்டா? எல்லாம் கணக்கா நடந்தது. கிரகலட்சுமி என்றால் அவள்தான். சொன்னால் போதுமா?"

"அவள், அவள் என்கிறீர்களே? நான் என்ன செய்து விட்டேன்? இப்படித் திரும்பிப் பாருங்கோ! இப்படி இருக்கும்போது சொன்னால் கேட்க மாட்டேனா?"

"கையை விடு! எனக்குத் தூக்கம் வந்துடுத்து. என்னைப் படுத்தாதே!" என்று சொல்லி விட்டுச் சுவர்ப் புறம் திரும்பிக் கொண்டு குறட்டை விடலானார்.

கல்யாணிக்கு நெஞ்சில் சம்மட்டியால் அடித்தது போல் இருந்தது. தனது ஸ்பரிசம் சிறிதாவது அவரை மனிதனாக்கவில்லையே என்றதில் ஒரு ரோஷம், சிறிது கோபமும் கூட. அன்று முழுவதும் அவளுக்குத் தூக்கமே வரவில்லை. அவள் உள்ளம் எண்ணங்களுடன் போராடிக் கொண்டிருந்தது.

அன்று முழுவதும் கல்யாணிக்குத் தூக்கம் எப்படி வரும்? தூரத்திலே எங்கிருந்தோ வெளிச்சம் தன்னை அழைப்பது போல் ஓர் உணர்வு. அது தன்னை வாழ்விக்குமோ அல்லது தகித்து விடுமோ என்ற பயம் அவளைத் தின்றுகொண்டிருந்தது.

கணவர் தன்னிடம் என்ன குறை கண்டார்? ஏன் இப்படி உதாசீனமாக இருக்க வேண்டும்? அதற்குக் காரணம் தனது குறையா, அல்லது அவரது..... அவருக்குக் குறை எப்படிச் சொல்ல முடியும்?

இப்படியே அவள் அன்று முழுவதும் தூங்கவில்லை. பாயில் படுத்துப் புரண்டுகொண்டிருந்தாள். சற்று ஒரு புறமாகப் புரண்ட கப்புவையர் பிரக்ஞை யில்லாது கையைத் தூக்கிப் போட்டார். அது அவள் மார்பில் அம்மிக் குழவி மாதிரிப் பொத்தென்று விழுந்தது. மயக்கம் கலைந்தது. பயம்! பிறகு புருஷனின் கைதான் என்ற உணர்ச்சி. அதில் ஒரு சாந்தி பிறந்தது. அந்தப் போதையில் அவளுக்குக் கண் இறங்கியது. தூங்கி விட்டாள். நடைமுறை உலகத்தில் இல்லா விட்டாலும்,

# ஒரு 90-விநாடிக் கண்ணோட்டம்— டிவிஎஸ் அளிக்கும் முழுமையான சேவை

டிவிஎஸ் ஒரு புதிய
டிரக்கை உங்களுக்கு
விற்பனை செய்கிறது.



அதன் முதலீட்டில் 70 சதவிகிதம் அல்லது
அதற்கு மேலும் பெற வழி செய்கிறது.



அதன் பாடியைக் கட்டித்
தருகிறது.



அதற்கான பராமரிப்பு சேவையை
அளிக்கிறது.



டயர்களை ரீடிரெட் செய்கிறது.



உங்கள் நம்பிக்கைக்கு
உரியது டிவிஎஸ்




அசல் மாற்றுப் பகுதிகள் பல டிவிஎஸ்
அலுவலகங்களிலும்,
ஏராளமான விற்பனை/பணி
நிலையங்களிலும் கிடைக்கின்றன.

டி.வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் சன்ஸ்
பிரைவேட் லிமிடெட், மதுரை.

SAA/TVS/1036



பூனா பிலிம் - டெலிவிஷன் பயிற்சி நிலையத்தில் சேர ஏக நெருக்கடி. தேர்வு ஆகாத ஒரு மாணவர் தேர்வுக் குழுவின் எதிரிலேயே ஒரு பாட்டில் நிறைய மூட்டைப் பூச்சி மருந்தைக் குடித்துவிட்டு மயங்கி விழுந்தார். ஆனால் அந்தப் பாட்டிலில் இருந்தது தண்ணீர் என்று பிறகு கண்டுபிடிக்கப்பட்டது!

இவ்வளவு நன்றாக நடித்தவருக்கும் பயிற்சி எதற்கு? — டைம்ஸ் ஆப் இந்தியா - பாலி

---

கனவு உலகத்திலாவது கணவன் சிரித்த முகத்துடன் பேசிக் கொண்டிருப்பது போல் அன்று அவளுக்குத் தோன்றியது.

காலையில் கல்யாணி எழுந்திருக்கும்போது என்றும் இல்லாதபடி வெகுநேரமாகி விட்டது. எழுந்ததும் குடத்தை எடுத்துக் கொண்டு நேராகக் குளக்கரைக்குப் போனாள்.

## 5

அன்று இரவு முழுவதும் சுந்தர சர்மாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை என்றால் வியப்பில்லை. இத்தனை நாட்களும் தமது மனத் திரையை விலக்கி அவளைப் பார்க்காததற்கு ஆச்சரியப்பட்டார். அந்த ஆச்சரியம் அவரை எங்கெங்கோ அழைத்துக் கொண்டு சென்றது. அவரோ சைத்திரிகர் — அழகுத் தெய்வத்தின் அடிமை! கல்யாணியின் சோகம் தேங்கிய கண்கள் அவருக்குக் கற்பனைக் கதையாக, காவியமாகத் தெரிந்தது. இரவு முழுவதும் உள்ளம் கட்டுக்கடங்காமல் கொந்தளித்தது.

சுப்புவையர், பாவம், அது ஒரு பிரகிருதி. அவர் வசம் கல்யாணி பிணிக்கப்பட்டால், விதியின் அற்பத்தனமான விலங்கை உடைத்தெறிய ஏன் மனம் வராது? அவரை மனிதனாகவே சர்மா நினைக்கவில்லை. அவரது சிறையிலிருந்து அவளை விடுவிக்க வேண்டும் என்று சர்மா நினைத்தார். அதில் கல்யாணியின் சம்மதம் — அதைப் பற்றிக்கூட அவருக்கு அதிகக் கவலையில்லை.

அவளை அழைத்துக் கொண்டு சென்று விட்டால்?.... வாழ்க்கை எவ்வளவு இன்பமாக இருக்கும்! இலட்சியத்துக்கு அவள் எவ்வளவு பெரும் ஊக்கமாக இருப்பாள்? மனிதப் புழுக்கமே இல்லாத, மனிதக் கட்டுப்பாடற்ற, மனித நாகரிகம் என்ற துர்நாற்றம் வீசாத கானகத்தில், வாழ்க்கையையே ஓர் இன்பப் பெருங் கனவாகக் கழித்தால் என்ன?

அன்று முழுவதும் அவரது உள்ளத்தில் ஓடிய எண்ணங்கள் ஒரு நிரந்தரப் பைத்தியக்காரனுடைய உள்ளத்தையும் தோற்கடித்து விடும். இரவு முழுவதும் விளக்கு அணைக்கப்படவில்லை. மூலையில் சன்னலையொட்டியிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, விளக்கையே கவனித்துக் கொண்டிருந்தார். விளக்கின் சிம்னி கரி பிடித்து மேலே புகையடைந்து வெளிச்சத்தை அமுக்கியது. இரண்டு நிமிஷம் விளக்கு 'பக்பக்' என்று குதித்தது. அவ்வளவுதான். அதுவும் அணைந்துவிட்டது.

அறை முழுவதும் இருட்டு. உள்ளே உட்கார்ந்திருக்க முடியவில்லை. மேல் வேஷ்டியை எடுத்துப் போட்டுக் கொண்டு வெளியே சென்றார். விடிந்துவிட்டது. ஆனால் நட்சத்திரங்கள் மறையவில்லை. கிழக்கே சற்று வெளுப்பு — வெள்ளைக் கீறல் மாதிரி.

சர்மாவுக்குக்காலையில் நடப்பது மனத்துக்கு நிம்மதியாக இருந்தது. அவர் வாய்க்கால் கரை வழியாகவே நடந்து கொண்டிருந்தார். சற்றுத் தூரம் சென்றவுடன் வயல் வரப்புகளின் மீது நடக்க ஆரம்பித்தார். தேகந்தான் ஏதோ யந்திரம் மாதிரி நடந்து கொண்டிருந்தது. மனம் மட்டும் தங்கு தடையின்றிக் கல்யாணியின் பின் சென்றுவிட்டது. "கல்யாணியை அழைத்துச் சென்றுவிட்டால்? அதற்கு இசைவாளா? அதற்கு என்ன சந்தேகம்? பிறகு எங்கு போவது? எங்கு போனால் என்ன? — மனிதன் இருக்கும் இடத்தைத் தவிர ...?"

சூரியோதயமாகி விட்டது. முகத்துக்கு நேரே வெய்யில் விழுந்து கண் கூச ஆரம்பித்ததும், சர்மாவுக்கு 'வெகு தூரம் வந்துவிட்டோம்' என்ற எண்ணம் தோன்றியது. உடனே திரும்பி, குளத்தில் குளித்து விட்டுப் போவதென்று அப்பக்கமாக நடந்தார்.

வெய்யிலின் சூடு நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகிறது. பொசுக்கப்படுவது போல், காலை வெய்யில் தகிக்கிறது. "அப்பாடா!"

குளக்கரை வந்து விட்டது. குனிந்து கொண்டு—மேட்டில் ஏறி, கரையின் மீது வளர்ந்திருந்த மரத்தடியில் நின்று, முகத்தைத் துடைத்துக் கொண்டார். இரண்டு மூன்று விநாடிகளில் கண் கூச்சம் விலகியது. குளத்தில் யாருமில்லை.

யாருமில்லையா!

மரத்தின் மறைவில் ஜலத்தில் நின்று கொண்டு, கல்யாணி தனது ஈரப் புடவையைப் பிழிந்து உடுத்திக் கொண்டிருந்தாள். ஈரம் சொட்டும் கூந்தல் முதுகை மறைத்தது. கன்னத்திலும், தோளிலும், குளக்கரையில் நன்றாக விளக்கி வைத்திருந்த குடத்திலும், இலைகளின் ஊடே பாய்ந்த சூரிய ஒளி பிரதிபலித்து மின்னியது. "அப்பா! வர்ணப் பெட்டியும் படம் எழுதும் திரைச் சீலையும் எடுத்து வரவில்லையே!" என்று நினைத்தார் சர்மா. கல்யாணிக்கு அவர் இருப்பது தெரியாது. தனிமை என்ற மன மறைவில் தனது ஈரப் புடவையை எடுத்து உதறிக் கொசுவி உடுத்திக் கொண்டாள். ஈரப் புடவையில் நின்ற அந்த அழகு அவருக்கு மஜும்தாரின் சித்திரத்தை நினைவூட்டியது. குனிந்து குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டு கல்யாணி கரையேறுவதற்குத் திரும்பினாள். அவள் முன்பு சர்மா வைத்த கண் மாறாமல் பார்ப்பதைக் கண்டதும் திகைத்தாள். முகம் முழுவதும் சிவந்து விட்டது. கண்கள் மிரண்டு அவரையே வெறித்து நோக்கின.

போவது என்றால் அவரைக் கடந்து போக வேண்டும். மனம் குழம்பியது. என்ன செய்வது? என்ன செய்வது? வெட்கம் தலைகுனியச் செய்துவிட்டது.

சர்மாவுக்கு அவளிடம் பேச வேண்டு மென்ற ஆசை. எப்படிப் பேசுவது? என்ன சொல்வது?

''நான் இன்று கொழுந்து மாமலைப் பக்கம் போகிறேன். நேற்றுப் போல் இன் றைக்கும் பட்டினியாக இருந்துவிடாதீர்கள்? நான் வராவிட்டால் பட்டினி கிடப்பதாவது? அதென்ன பைத்தியக்காரத்தனம்?'' என்று சிரித்தார். அவர்கள் உள்ளம் இருந்த நிலை யில், இம்மாதிரியான பேச்சு அபாயகரமான துறைகளிலிருந்து விலகி, நிம்மதி அளிப்பது போல் ஒரு பிரமையை உண்டுபண்ணியது.

கல்யாணிக்கு இவ்வார்த்தைகள் கொஞ்சம் தைரியத்தை அளித்தன. அவரிடம் பேசு வதற்கு மனம் ஆவல் கொண்டது. உள்ளத் தின் நிம்மதி கன்னத்தின் சிவப்பைச் சிறிது குறைத்தது.

''ஆண் பிள்ளைகள் சாப்பிடுமுன் கொட்டிக் கொண்டு அவாளுக்குக் கல்லையும் மண்ணை யுமா போடுவது? இப்பவே போறேளா? காலையிலே ஏதாவது சாப்பிட வேண்டாமா? அங்கு சாப்பாட்டுக்கு...'' என்றாள்.

''இப்பொழுது சாப்பிட வருகிறேன். மத்தி யானத்துக்கு என்ன? அதை நான் பார்த்துக் கொள்ளுவேன். ஏது இவ்வளவு நேரம்? எப்பொழுதும் அருணோதயத்தில் ஸ்நானம் ஆய்விடுமே?'' என்றார்.

அதற்கு அவள் ஒன்றும் பதில் சொல்ல வில்லை. அவள் முகம் மறுபடியும் சிவந்தது. இரவு பட்ட வேதனையும், ஓடிய எண்ணங் களும் மறுபடியும் அவள் மனத்தில் தோன்ற ஆரம்பித்தன.

அவரைப் பரிதாபமாகப் பார்த்துவிட்டுக் கரையேறி, வீட்டை நோக்கி நடந்தாள். அவரைத் தாண்டிச் செல்லும்போது அவள் ஈரப் புடவை அவர்மீது பட்டது. சர்மா வுக்கு அவளை அப்படியே பிடித்து ஆலிங்கனம் செய்யக் கரங்கள் துடித்தன. ஆனால், தமது கனவுக் கோட்டை இடிந்து பாழாகி விட்டால் என்ன செய்வது என்ற பயந்தான் அவரைத் தடுத்தது.

சர்மா குளித்து விட்டு நேராகக் கல்யாணி யின் வீட்டை அடைந்தார். அப்பொழுது சுப்புவையர் கோவிலுக்குச் சென்றுவிட்டார். வீட்டில் கல்யாணியைத் தவிர வேறு ஒருவரும் இல்லை.

இவ்வரவை எதிர்பார்த்திருந்த கல்யாணி இலையைப் போட்டுச் சுடு சாதம் எடுத்து வைத்தாள்.

''என்ன! ஏது. இதற்குள் சமையலாகி விட்டது! ஏன் இவ்வளவு அவசரம்?'' என்றார் சர்மா. அவருக்குச் சாப்பாடு செல்லாததற் குக் காரணம் பசியின்மையன்று.

''இன்னும் கொஞ்சம் குழம்பு போட்டுச் சாப்பிடுங்கள்'' என்றாள் கல்யாணி. அன்று அவளுக்கு வாய்ப் பூட்டுத் திறக்கப்பட்ட மாதிரி இருந்தது. அவரிடம் பேசுவதில் ஓர் ஆறுதல்.

''காலையில் சுடுசாதம் சாப்பிட முடியுமா? ...அவர் எங்கே? கோவிலுக்குப் போயிருக் கிறாரா? எப்பொழுது வருவார்?... கொஞ்ச மாகப் போடுங்கள், போதும்!'' என்றார்.

சாப்பாடு முடிந்தது. கை கழுவ ஜலம் வெளியில் வைக்கப்படவில்லை. பாத்திரத்தை எடுத்துக் கொண்டு சமையலறைக்குள் சென்ற கல்யாணி வரச் சிறிது தாமதமாயிற்று. சர்மா பின்புறம் சென்று கைகழுவிக்கொண்டு சமையலறைப் பக்கம் இருந்த தாழ்வாரத்தின் பக்கம் வந்தார்.

''ஐயோ! ஜலம் வைக்க மறந்து விட் டேனே! இந்தாருங்கள், இதை மத்தியானத் துக்கு வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று ஒரு சிறு பொட்டலத்தைக் கையில் கொடுத்தாள்.

''இதென்ன? எனக்கு ஒன்றும் வேண்டாம் என்றேனே!'' என்றார்.

''தோசை! கொஞ்சந்தான் வைத்திருக் கிறேன். மத்தியானம் முழுதும் பட்டினி யிருக்கவாவது?'' என்றாள் கல்யாணி.

அதை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கெஞ்சுவது போல் அவளுடைய கண்கள் அவரை நோக்கின.

சர்மா, ''கல்யாணி!'' என்று கம்பிய குரலில் அவளை அழைத்து விட்டு, அப்படியே இழுத்து ஆலிங்கனம் செய்து, அதரத்தில் முத்தமிட்டார். கல்யாணியும், கட்டுண்ட சர்ப்பம் போல், தன்னையறியாது கொந்த ளித்த உள்ளத்தின் எதிரொலிக்குச் சிறிது செவி சாய்த்து விட்டாள். பிரக்ஞை வந்தது போல் நடைமுறைச் சம்பிரதாயங்கள் அவ ளைத் தாக்கின.

தனது வலிமையற்ற கைகளால் பலமுள்ள அவரை நெட்டித் தள்ளிவிட்டு, முகத் தைத் திருப்பி, ''என்னை விட்டுவிடுங்கள்!'' என்று பதறினாள்.

சர்மா தமது கைகளை நெகிழ்த்தினார். கல்யாணி விலகி நின்று கொண்டு ''என்ன போங்கள்!'' என்று அவரைத் தண்டிப்பது போல் நோக்கினாள்.

சர்மா, ''கல்யாணி, நான் சொல்வதைக் கேள்!'' என்று மறுபடியும் நெருங்கினார். கல்யாணி சமையலறைக்குள் சென்று தாளிட் டுக்கொண்டாள். உள்ளிருந்து விம்மி விம்மி அழும் குரல் கேட்டது.

''கல்யாணி! கல்யாணி!''

பதில் இல்லை.

சர்மாவும் கலங்கிய உள்ளத்துடன் வெளியே சென்றார். கொழுந்து மாமலைக்குச் செல்வது அவருக்கு நிம்மதியை அளிக்கலாம்.

## 6

கல்யாணிக்கு அன்று முழுவதும் மனம் ஒன்றிலும் ஓடவில்லை. முதலில் பயம், தவறு என்ற நினைப்பில் பிறந்த பயம். ஆனால் சர் மாவின் ஸ்பரிசம் அவள் தேகத்தில் இருந்து கொண்டிருப்பது போன்ற நினைவு. சுகமா யிருந்தது. அவள் உள்ளத்தின் ரகசியத்தில் சர்மாவின் ஆசைகள் எதிரொலித்தன.

அன்று முழுவதும் அவளுக்கு ஓரிடத்திலும் இருப்புக் கொள்ளவில்லை. சுப்புவையர் மத்தி யானம் வந்தார். அவருடைய இயற்கைப் பிரலாபத்துடன் போஜனத்தை முடித்துக் கொண்டு நித்திரை செய்ய ஆரம்பித்தார்.

கல்யாணி அவரைப் பார்க்கும்போதெல் லாம் பரிதாபமாக இருந்தது. தன்னை 'மூத் தாளைப்போல்' இருக்கவில்லை என்று வைதா லும், தன்மீது ஓர் அந்தரங்கமான நம்பிக்கை வைத்திருப்பதால், அதை மோசம் செய்வதா என்று எண்ணினாள்.

# எங்கள் தங்க ராஜா

**நல்லவன் - பொல்லாதவன்; சாது - முரடன்; பண்பின் சிகரம் - பாவத்தின் உருவம்; இப்படி இரு வேறு இயல்புகள் கொண்ட பாத்திரங்களை ஏற்று நடிகர் திலகம் இப் படத்தில் நடிப்பின் சிகரமாக விளங்குகிறார்.**

பெண்களுக்குப் பயந்து அவர்களைக் கண்டாலே கூசிக் கொண்டு விலகி ஓடும் மெடிக்கல் காலேஜ் மாணவன் ராஜாவாக வரும்போது அவர் முகத்தில் சாதுவின் களை யும், அப்பாவி மனப்போக்கும் முழுமையாக வெளிப்படுகின்றன. அதே சமயத்தில் ரவுடி பைரவனாக வந்து அட்டகாசச் சிரிப்பும், ஆணவப் பேச்சும், அலட்சியப் பார்வையும் காட்டித் தம் இலட்சியத்தை நிறைவேற்ற முயலும் காட்சிகளில், 'அந்த அப்பாவி சிவாஜியா இந்தப் போடு போடுகிறார் !' என்று வியப்பில் மூழ்க வேண்டியிருக்கிறது. சண்டைக் காட்சிகளை ரசிக்கும் ரசிகர்களுக்கும் சிவாஜி குறை வைக்க வில்லை.

ராஜாவின் வேண்டாத காதலி வசந்தியாக வந்து வெற்றி பெறும் பாகத்தை ஏற்றிருப்ப வர் மஞ்சுளா; தாம் ஏற்ற பாத்திரத்துக்கு ஏற்றம் அளித்திருக்கிறார்.

கதையை ஓட்டிச் செல்லுவதே சௌகார் ஜானகிதான்! ராஜாவின் மூத்த சகோதரி — அத்துடன் வாழ்க்கையில் வழுக்கி விழுந்த சகோதரியும்கூட. கண்ணீர் விட்டுக் கலங்கிக் கரைந்து போகும் பாத்திரம் சௌகார் ஜான கிக்குக் கைவந்த பாத்திரம்! சந்தர்ப்பம் வசமாகக் கிடைத்தால் விட்டு விடுவாரா? ஜமாய்த்து விட்டார். ஆனால் அவர் போட் டிருந்த 'மேக்கப்' சரியில்லை. பாவாடை தாவணியுடன் இருக்கும் பருவத்தில் (அந்தப் பருவத்தின் வயதென்ன என்று மட்டும் கேட்காதீர்கள்! எவ்வளவு முதிய நடிகையானா லும் பாவாடை, தாவணி அணிந்து விட்டால் அவள் 'ஸ்வீட் ஏஜ் கர்ல்'தான்! இது திரை உலகின் நியதி!) அந்தப் பெண் கற்பழிக்கப் படுகிறாள். அந்தக் கொடுமையான காட்சி யைக் கண்ணுக் கெதிரில் பார்த்துவிட்ட சிறுவன் ராஜாவின் உள்ளம் கொதிக்கிறது. அதுவே இடைவேளைக்குப் பிறகு பழி வாங் கும் படலமாக உருவாகிறது.

திரைக்கதையின்படி, சிறுவன் ராஜா வாலிபனான பிறகு தன் அக்காளைச் சீரழிந்த நிலையில் சந்திக்கிறான். பல ஆண்டுகளின் ஓட்டம், முகத்திலோ தோற்றத்திலோ கொஞ்சம்கூடத் தெரியாமல் 'அன்று கண்ட மேனிக்கு அழிவில்லாத' நிலையில் சௌகார் ஜானகியைக் காண்கிறோம். வேடிக்கைதான்!

காதர் சாகிபுவாக வரும் மேஜர் சுந்தர ராஜனின் சம்பாஷணையில் 'மேஜரை'த்தான் காண முடிகிறதே தவிர ஒரு முஸ்லிமைக் காண முடியவில்லை!

இது ஏராள பொருட் செலவில் தயாரிக் கப்பட்டிருக்கும் மகத்தான வண்ணப் படம்.

தயாரிப்பு, டைரக்ஷன் இரண்டும் வி.பி. ராஜேந்திரப் பிரசாத்தைச் சேர்ந்தவை. படத்தின் மூலக் கதை, ''மானவடு தான வடு'' என்ற தெலுங்குக் கதை. பாலமுருகன் சிறப்பாக வசனம் தீட்டி யிருக்கிறார்.

'' இரவுக்கும் பகலுக்கும் இனி என்ன வேலை?'' என்ற கண்ணதாசனின் பாடல் நன்று யிருக்கிறது. நாகேஷ் நகைச்சுவைக் காட்சிகளில் சுடர்விட்டுப் பிரகாசிக்க, மனோ கர் சண்டைக் காட்சிகளில் ஜமாய்க்கிறார்.

படத்தின் அதிர்ச்சி தரும் முடிவு...... ஊஹூம்! சொல்லமாட்டேன். வெள்ளித் திரையில் காண்க!

— **காந்தன்**

கல்யாணிக்கு இரண்டையும் ஏக காலத்தில் பிரிய மனமில்லை. வீடு, பேச்சு, சம்பிரதாயம் இதை யெல்லாம் உடைக்க மனம் வரவில்லை. சுப்புணையரை ஏமாற்றவும் மனம் துணிய வில்லை. இருளில் வழி தெரியாது தவிக்கும் பாதசாரி, ஏதாவது ஒன்றைத் தனது நம் பிக்கைக்குப் பாத்திரமானது என்று சங்கற் பித்துக் கொண்டு அதை நோக்கிச் செல்வது போல், தன் கணவர் நித்தியம் பூஜை செய்யும் கோவிலுக்குச் சென்று கலங்கிய உள்ளத்துக் குச் சாந்தியை நாடினாள். கோவில் மூல ஸ்தானத்தின் இருளுக்கு இவளது மன இருள் தோற்றுவிட்டதாகத் தெரியவில்லை. மூல ஸ்தானத்தின் மங்கிய தீபவொளியில் லிங்கம் தெரிவது போல் சர்மாவின் முகம்தான் அவள் அகத்தில் பிரதிபலித்துக் கொண்டிருந்தது.

அன்று இரவு கல்யாணி சுப்புணையர் பக்கத் தில் உட்கார்ந்து கால் பிடித்துக் கொண்டிருக் கும்பொழுது, அதிகாலையில் எழுந்து ஆற் றுக்குச் சென்று குளித்துவிட்டு வருவதற்கு அனுமதி கேட்டாள். காரணம், சர்மாவின் மீது ஆசை இருந்தாலும், அவரைச் சந்திக்கா திருக்கவேண்டுமென்ற நினைப்பு.

''விடியற்காலத்தில் ஏன் நதிக்கு...?'' என் றார் சுப்புணையர்.

''குளத்தில் ஜலம் வற்றி நாற்றம் எடுக் கிறதே என்று யோசித்தேன்!'' என்றாள்.

''சரி, சரி, போய்விட்டு வாயேன்; அதுக் கென்ன கேள்வி வேண்டியிருக்கு? நேக்குத் தூக்கம் வருகிறது. சும்மா தொந்தரவு செய் யாதே!'' என்று மறுபுறம் திரும்பிப் படுத்துக் கொண்டார்.

கல்யாணிக்கு அன்று இரவு முழுவதும் உறக்கம் வரவில்லை. சர்மாவை நினைக்கும் பொழுதெல்லாம் ஒரு மகிழ்ச்சி. அவர் மறு படியும் தன்னைத் தழுவ மாட்டாரா என்ற ஆசை. இப்படியே தன் பொருளற்ற கனவு களிடையே அவள் தூங்கினாள்.

* * *

கொழுந்து மாமலைக்குச் சென்ற சர்மா வுக்கு வேலை ஓடவில்லை. அன்று முழுவதும், கல்யாணி என்ன நினைப்பாளோ, அவளை மறு படியும் எப்படிப்பார்ப்பது என்பதே யோசனை. அன்று இரவு முழுவதும் காட்டிலேயே இருந்து விட்டார். அப்பொழுதும் சாந்தி பிறக்க வில்லை. அதிகாலையில் சென்று சாமானை எடுத் துக்கொண்டு ஊரை விட்டே போய்விடுவது என்று நினைத்துக் கொண்டு திரும்பினார்.



கொழுந்து மாமலை ஆற்றுக்கு அக்கரையில் இருந்தது. ஊருக்கு வரவேண்டுமானால் ஆற்றைக் கடந்துதான் வரவேண்டும். மணி மூன்று இருக்கும்பொழுது ஆற்றங்கரையை அடைந்தார். மனத்தில் சாந்தி பிறக்கவில்லை. உள்ளம் பேய் போலச் சாடியது.

இன்னும் நன்றாக விடியவில்லை. ஆற்றில் யாரோ துணி துவைப்பது போல் சத்தம். இவ்வளவு அதிகாலையில் அங்கு யார் வர முடியும்?

''யாரது?'' என்றார்.

''யாரது?'' என்ற பதில் கேள்வி பிறந்தது.

குனிந்து துவைத்துக் கொண்டிருந்த உருவம் நின்றது. ஒரு பெண் — கல்யாணி!

''கல்யாணி! நீயா இங்கு!... இந்த நேரத்தில்! பயப்படாதே! நான்தான் சர்மா!''

''நீங்களா!''

அவள் சொல்லி முடியு முன் சர்மா அவளை அப்படியே தழுவிக் கொண்டார். அவள் விலக முயன்றாள். இருவரும் தடுமாறிப் பாதி ஜலத்திலும் பாதி மணலிலும் விழுந்தனர். கல்யாணியின் முகத்திலும் அதரத்திலும் மாறி மாறி முத்தமிட்டார். கல்யாணி தடுக்கவில்லை. அவருடைய போக்குக்கெல்லாம் தடை செய்யவில்லை.

சற்று நேரம் கழிந்தது.

''கல்யாணி!''

''என்ன?''

''என்னுடன் வந்துவிடு! இந்த மனித நாற்றமே அற்ற இடத்துக்குச் சென்றுவிடுவோம்!''

''ஐயோடி! அது முடியாது!''

அந்த மங்கிய வெளிச்சத்திலும் அவளது மிரண்ட பார்வை மின்னியது.

'' பிறகு....?''

''எனக்கு ஒன்றும் தெரியவில்லை. நீங்கள் சொல்லுகிற மாதிரி... அதற்குப் பயமாக இருக்கிறது!''

சர்மாவுக்கு உலகம் அர்த்தமற்ற கேலிக் கூத்துப் போலும், அசட்டுத்தனம் போலும் பட்டது.

''கல்யாணி, நான் போகிறேன்!'' என்றார்.

''எங்கே? போக வேண்டாம்! இங்கேயே இருந்து விடுங்கள்!''

''சீ! அது முடியாத காரியம். என்னுடன் வா!'' என்று கையைப் பிடித்தார்.

''முடியாது!''

மறுபடியும் அக்கரைப் பக்கம் ஒரு மனித உருவம் இருளில் சென்று மறைந்தது.

கல்யாணியின் வாழ்க்கை — அலையில் ஒரு குமிழி உடைந்து போயிற்று.

# ஒரு தங்கமான கட்டுரை!

**கே. ஆர். என். சுவாமி**

ஒரு சமயம் லெனின் சொன்னார்: ''பொதுமக்களுக்காகக் கட்டப்படும் குளியலறைகள், மலஜலம் கழிக்குமிடங்கள் ஆகியவற்றின் சுவர்களும் தரைகளும் தங்கரேக் பூசப்பட்டுப் பளபளக்கும் நாள் வரத்தான் போகிறது!''

இதற்கேற்றாற்போலத்தான் சோவியத் விஞ்ஞான அகாதமியைச் சேர்ந்த பேராசிரியர் ஸெஸ்கிவிச் என்பாரும் நம்பிக்கை தொனிக்கத் தீர்மானமாகப் பேசுகிறார்: உலகின் கடல்களுக்கு அடியில் பத்து பில்லியன் டன் தங்கம் இருக்கிறது; அதாவது ஒரு தனி மனிதனுக்கு மூணு டன் தங்கம் என்ற விகிதத்தில் இருக்கிறது!

பேஷாக இருக்கட்டும்; என்றாலும் லெனினுடைய கனவு நிறைவாகும் நாள் சமீபிப்பதாகத் தெரியவில்லை. அப்படி நேர்ந்தால் தங்கத்தின் மதிப்பே திடுதிடுவென்று விழுந்து விடாதா?

## மனிதனை ஆள்கிறது!

ஆனால் பத்தாயிரம் ஆண்டுகளாகத் தங்கம் ஓர் அபூர்வ உலோகமாகத்தான் இருந்து வந்திருக்கிறது மனிதனுக்கு. மனிதனை அது ஆண்டு, ஆட்டிப் படைத்து வந்திருக்கிறது. தங்கம் நீரைப் போல் இருபது மடங்கு கனமுள்ளது. ஒரு கன அடி தங்கம் ஆயிரத்து இருநூறு பவுண்டு எடையுடையதாயிருக்கும்.

கிறிஸ்து பிறப்பதற்கு 2900 ஆண்டுகளுக்கு முன்பாகவே எகிப்தில் தங்கத்தைப் பூமியிலிருந்து தோண்டி எடுக்க ஆரம்பித்து விட்டார்கள். அதற்குரிய சரித்திர ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன. 'ஜேஸனும் தங்க ஆட்டு ரோமமும்' என்ற கிரேக்கக் கதை தங்கத்தைத் தேடி அலைந்த வரலாற்றைத்தான் விவரிப்பதாகச் சில சரித்திர ஆசிரியர்கள் நம்புகிறார்கள்.



சவரன் விலை கிறுகிறுவென்று ஏறி ரூ. 273 வரை சென்று, தலையைக் கிறுகிறுக்க வைக்கிற இந் நாளில் காசு கொடுத்துத்தான் வாங்க முடியவில்லை, தங்கம் பற்றிப் படித்தாவது வைக்கலாமே தாராளமாக!




தங்கத்தைச் சுரங்கத்திலிருந்து எடுப்பது மிக நுணுக்கமான விஞ்ஞானக் கலையாக வளர்ந்துவிட்டது. 'ஸயனைட் முறை'யினால் மிகச் சிறிய தங்கத் துகள்களைக் கூடப் பிரித்தெடுத்துவிட முடியும். தங்கம் கட்டியாகப் பூமியில் அபூர்வமாக அகப்படும். இதுவரை கிடைத்துள்ள மிகப் பெரிய தங்கக் கட்டி 2,500 அவுன்சு எடையுள்ளது. ஆஸ்திரேலியாவில் 1869ல் கிடைத்தது.

உலகில் ஐம்பத்தொன்பது நாடுகள் தங்கச் சுரங்கம் வெட்டிப் பொன் எடுக்கின்றன. அவற்றில் தென் ஆப்பிரிக்காவே முன்னணியில் நிற்கிறது. 1963 ஓராண்டில் மட்டும் அது இருபத்தேழரை மில்லியன் அவுன்ஸ் தங்கத்தை எடுத்தது. இதை அடுத்து வரிசைக் கிரமமாக ரஷ்யா, கனடா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா, கானா ஆகிய நாடுகள் தங்க உற்பத்தியில் சிறந்திருக்கின்றன. இந்நாடுகளிலெல்லாம் தங்க உற்பத்தி வருஷத்தில் ஐந்து சதவிகிதம் என்ற அளவில் உயர்ந்து கொண்டே வரும்போது இந்தியாவில் குறைந்து கொண்டே வருவது நமது துரதிர்ஷ்டமே!

## எவ்வளவு தங்கம்?

தங்கத்தின் மதிப்பை மனிதன் உணரத் தொடங்கிய பின்னர் எவ்வளவு தங்கம் சுரங்கங்களில் வெட்டி எடுக்கப்பட்டிருக்கிறது என்ற ஆராய்ச்சி சுவையானது. ஆனால் முழுமையாகக் கணிப்பது சாத்தியமேயில்லை. பார்க்லே பாங்கு நிறுவனம் 1493ம் ஆண்டுக்குப் பிறகு பூமியிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட தங்கத்தின் அளவைக் கணிக்க முடியும் எனத் தீர்மானித்து ஆராய்ச்சியில் இறங்கியது. அதன் முடிவு: 72,000 டன்! இதைக் கொண்டு ஐம்பது கன அடியுள்ள ஒரு சதுரமாகத் தங்கக் கட்டி தயாரிக்கலாம்!



அமெரிக்கத் தங்கக் கோட்டை! ''ஃபோர்ட் நாக்ஸ்''

ஒவ்வொரு நாட்டிலும் நாணயத்தின் ஸ்திரத் தன்மையைக் கருதி அரசு தங்கம் வைத்திருக்கும். தனியார் பலரும் தங்கத்தைச் சேர்த்து வைக்கின்றனர். உலகம் முழுமையும் தனியார்களிடமுள்ள தங்கத்தின் மதிப்பைக் கணக்கிட்டால் அது, ஆஸ்திரியா, கனடா, பிரான்ஸ், மேற்கு ஜெர்மனி, கிரீஸ், ஹாலந்து, இத்தாலி, போர்ச்சுகல், ஸ்பெயின், ஸ்வீடன், ஸ்விட்ஜர்லாந்து ஆகிய நாடுகளின் அரசாங்க பாங்குகளில் உள்ள தங்கத்தின் மொத்த மதிப்பை விடக் கூடுதலா யிருக்கும்!

## உலகிலேயே மிகப் பாதுகாப்பான இடம்

எந்த ஒரு தேசத்தையும் விட மிக அதிகமான தங்கத்தை வைத்திருப்பது அமெரிக்கா. 1949ல் அந்நாளைய மதிப்புப்படி அது, ஃபோர்ட் நாக்ஸ் என்ற பாதுகாப்பான இடத்தில் 18,675 கோடி ரூபாய் பெறுமானமுள்ள தங்கம் வைத்திருந்தது. இவ்விடத்தில் தங்கத்தை அடுக்குவதற்கான அறைகள் 1937ல் நாற்பத்தைந்து லட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட்டன. இருபத்தைந்து அங்குலம் கனமுள்ள எஃகு — காங்கிரீட் சுவர்களும் இருபது டன் எடையுள்ள கதவுகளும் குண்டுகளால் பாதிக்கப்படாத கூரையும் உடையவை. அத்து மீறி யாராவது உள்ளே நுழைந்தால் தானியங்கு முறையில் மணி ஒலிக்கும். உலகிலேயே மிகவும் பாதுகாப்பான இடமாகக் கருதப்படும் ஃபோர்ட்-நாக்ஸ் அமெரிக்கக் கவச ராணுவத்தின் தலைமையகமுமாகும்! இத்தனை பந்தோபஸ்துக்களையும் மீறி ஆபத்து நெருங்கிவிட்டால் தங்கத்தை யாரும் தூக்கிச் செல்ல முடியாதபடி இந்தப் பிரதேசம் முழுவதையும் வெள்ளக்காடாக ஆக்கிவிடக் கூடிய வசதியும் உண்டு!

உலகின் மிகப் பெரிய தங்க மார்க்கெட் லண்டன்தான். பூமியில் வெட்டி எடுக்கப்படும் தங்கத்தில் 85 சதவிகிதம் இங்குதான் விற்பனைக்கு வருகிறது! நான்கைந்து மிகப் பெரிய தங்க வியாபார நிறுவனங்களின் பிரதிநிதிகள் தினந்தோறும் கூடி அன்றைய தங்கத்தின் விலையையும், கல்யாணத்துக்கு நிற்கும் நம் ஊர் மத்தியதர வகுப்புப் பெண்ணின் தலைவிதியையும் ஒருங்கே நிர்ணயித்து விடுகின்றனர்! நம் ஊர் மட்டுமென்ன, உலகெங்குமே இதன் எதிரொலி கேட்கத்தான் செய்கிறது. சாதாரணமாக இந்தப் பிரதிநிதிகளின் கூட்டத்தில் தங்கத்தின் விலை ஓர் அவுன்சுக்கு அரை பென்னி வீதம்தான் கூடவோ குறையவோ செய்யும். ஆனால் பொருளாதார நெருக்கடி காலங்களில் விலை தாறுமாறாக ஏறும், இறங்கும்.

உலகின் மிகப் பழமையான தங்கச் சுரங்கங்களில் சில இந்தியாவில் உள்ளன. தங்கத்தின் நாணய மதிப்பினை ஆதி நாளிலேயே நம் நாட்டவர் உணர்ந்திருந்தனர். கி. மு. 323ம் ஆண்டில் கௌடில்யர், தங்கம், தங்க நகைகள் வைத்திருப்பதற்கு வரையறைகள் சட்ட திட்டங்கள் ஏற்படுத்தினார். பேராசையுடன் பொன்னைக் குவித்து வைத்திருப்போரை வேட்டையாடி, தங்கத்தை வெளிக்கொணர ஏற்பாடு செய்தார்.

## பழம் பெருமையும் அவப் பெயரும்

இந்தப் பழம் பெருமையெல்லாம் ஒருபுறமிருக்க 'உலகத்தின் தங்கத்துக்கெல்லாம் சாக்கடை இந்தியாதான்' என்ற அவப் பெயரும் இந்தியாவுக்கு ஏற்பட்டிருக்கிறது. தங்கத்தின்மீது நம் மக்களுக்கு உள்ள அளவுகடந்த ஆசையின் விளைவாகவும் நேர்முகமாகவும் மறைமுகமாகக் கள்ளக் கடத்தலிலும் ஏராளமான தங்கம் இங்கு வருகிறது. தங்கமாகவும் நகைகளாகவும் பாரத மக்களிடம் 103 மில்லியன் அவுன்சு தங்கம் இருக்கலாம் எனச் சிறிது காலத்துக்கு முன் மதிப்பிடப்பட்டது. இதன் பெறுமானம் 1750 கோடி ரூபாய். தங்கக் கட்டுப்பாடு வந்தபோது தங்க மார்க்கெட் ரொம்பப் பாதிக்கப்பட்டதோடு பொன் ஆசாரிகளின் வாழ்வும் குலைந்தது. 1961ல் எட்டு லட்சம் பொன் ஆசாரிகள் இருந்தார்கள். 1965ல் இவர்கள் எண்ணிக்கை பாதியாகக் குறைந்து விட்டது. தங்கக் கட்டுப்பாடு குறைந்தபட்சம் 250 பொன் ஆசாரிகளின் தற்கொலைக்குக் காரணமாயிருந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை.

## கள்ளக் கடத்தல்

1953 முதல் 1966வரை கஸ்டம்ஸ் அதிகாரிகள் 21,648 கிலோ கிராம் தங்கத்தைக் கைப்பற்றியுள்ளனர். அதன் மதிப்பு 18 கோடி ரூபாய்! இருந்தும் கள்ளக் கடத்தல் கனஜோரான வியாபாரமாகச் செழிக்கத்தான் செய்கிறது இன்றும் கூட!

இந்தியாவின் ஃபோர்ட் நாக்ஸ் எது? நாக்பூரில் இருக்கிறது. இங்கு இந்திய நாணயத்துக்குப் பக்க பலமாக ரிஸர்வ் பாங்கு ஏழுமில்லியன் எழுநூறு ஆயிரம் அவுன்ஸ் தங்கத்தை வைத்திருக்கிறது. பாகிஸ்தான் பிரிவினையின்போது அதன் பங்குக்கு 770 ஆயிரம் அவுன்ஸ் தங்கத்தைக் கொடுத்தோம். அதன் அந்நாளைய மதிப்பு பன்னிரண்டு கோடி ரூபாய்.

ரிஸர்வ் பாங்கின் தங்கக் கையிருப்பு மதிப்புக்கு மிகவும் அதிகமாக நோட்டுக்கள் அச்சடித்துப் புழங்க விடுவதே நமது பொருளாதாரச் சீர்குலைவுக்கு ஒரு முக்கிய காரணம்.

தமிழாக்கம்: **குட்டி கிருஷ்ணன்**




**'இதயமின்றி இசையில்லை, இசையின்றி வாழ்வில்லை' என்ற பேருண்மையை இந்த அழகிய ஹங்கேரிய நாடோடிக் கதை எத்தனை எளிமையாக எடுத்துச் சொல்கிறது!**

அந்த நாடோடி ரொம்பக் கவலையுள்ள மனிதன். அவன் தன்னந் தனியாக இருந்தான். அவனிடம் உணவு இல்லை, பணமில்லை. எங்கு போவதென்றும் தெரியாத நாடோடி! ஆனால் அவனிடம் ஒரு பிடில் இருந்தது. அது அவனது உயிருக்குயிரான சொத்து. அவன் அதிலிருந்து இனிய இசை எழுப்பி மகிழ்ந்தான்.

ஒரு நாள் நாடோடி காட்டின் வழியே ஒரு பாதையில் சென்று கொண்டிருந்தான். காட்டின் நடுவே பயணிகள் தங்குவதற்கேற்ற ஓர் இடம். அதன் அருகே ஒரு நீரோடை. நாடோடி அந்த விடுதியின் வாசலில் நின்று வயலினில் இசை பொழிந்தான். அவனது இசையில் மயங்கிப் பணமோ, உணவோ தரமாட்டார்களா என்ற நப்பாசை அவனுக்கு! யாரும் அவனைப் பொருட்படுத்தவில்லை.

ஓர் இளம் காற்று அவனது வயலின் இசையை எடுத்துச் சென்றது. மரங்கள் பலவற்றைக் கடந்து ஒரு சைத்தானைச் சென்றடைந்தது கீதம். அவன் ஒரு 'வில்லோ' மரத்திலிருந்தபடி இந்த இசையைக் கேட்டான். 'நான் எப்படியாவது அந்தப் பிடிலை அவனிடமிருந்து பெறவேண்டும். நான் இசை வழங்கினால் உடனே எல்லோரும் என்னைப் பின் தொடர்ந்து வருவார்கள்' என்று எண்ணினான் சைத்தான்.

உடனே ஒரு கம்பளிக் கோட்டைப் போட்டுக் கொண்டு பெரிய மனிதன் மாதிரி அந்த நாடோடியின் இருப்பிடம் வந்து சேர்ந்தான்.

''வணக்கம், நாடோடியே!'' என்றான் சைத்தான்.

''வணக்கம், நீ யாராயிருப்பினும் சரி'' என்று கூறினான் நாடோடி. அந்தச் சைத்தானின் தலையில் உள்ள கொம்புகளை அவன் அணிந்திருந்த உடை மறைக்கவில்லை.

''நான் உனக்கு உதவுகிறேன். ஆனால் உனக்கு மிகுந்த விருப்பமுள்ள பொருளைத் தந்துவிட வேண்டும்!'' என்றான் சைத்தான்.

''என்னிடம் இந்தப் பிடில் மட்டுமே இருக்கிறது!'' என்றான் நாடோடி.

''அப்படியானால் அதைக் கொடுத்து விடு!''

''நான் அது இல்லாமல் வாழ முடியாதே!''

''உனக்கு நிறையத் தங்கம் தருகிறேன்!''

நாடோடி கொஞ்சம் யோசனை பண்ணினான். அவனுக்குப் பிடில் மீது அதிகப் பிரியம்தான். ஆனால் பசி அவனை அல்லாட வைக்கிறதே!

உடனே சைத்தான் அருகிலுள்ள ஓடையிலிருந்து ஒருவகைப் புல்லைப் பிடுங்கி அதை இரு குதிரைகளாக்கினான். இருவரும் அவற்றில் ஏறிக் காற்றில் பறவைகளைப்போல் பறந்தார்கள். மலைகளுக்கிடையேயுள்ள வனப்பிரதேசத்துக்கு இருவரும் வந்தனர்.

சைத்தான் நாடோடியின் கையைப் பிடித்து நீரருவிக்கு இழுத்துச் சென்றான். அந்த அருவி நீரில் தங்கம்போல் பளபளத்த கற்களை எடுத்தான் சைத்தான். அவற்றைக் கண்டு நாடோடிக்கு ஒரே ஆச்சரியம்! அவற்றைக் கையால் தொட்டுப் பார்த்தான். அசல் தங்கமாகவே இருந்தன.

''நீ உன் வார்த்தையைக் காப்பாற்றிவிட்டாய்! நானும் என் வார்த்தையைக் காப்பாற்ற வேண்டும். எனது பிடிலில் 'பிரியா விடை' என்னும் கீதம் இசைக்கிறேன்!'' என்றான் நாடோடி. அப்படியே இதயத்தைப் பிழியும்படியாக இசையெழுப்பி அந்தக் கல் நெஞ்சச் சைத்தானையும் அழ வைத்து விட்டான்.

இசை முடிந்ததும் நாடோடி பிடிலின் துவாரத்தில் தன் உதடுகளைப் பொருத்தி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்!

# தண்ணீர் அறுவடை

**வா**னம் பொழிகின்ற மழை நீரில் பெரும் பகுதி குடிப்பதற்கோ விவசாயத்துக்கோ பயன்படாது வீணாகி விடுகிறதல்லவா? அதிலும், பொட்டல்களும் வறட்சிப் பிரதேசங்களும் நிறைந்த நாடுகளில் இவ்விதம் நல்ல தண்ணீர் விரயமாவது வருந்தத் தக்கது. இந்த விரயத்தைத் தடுக்கத் தீவிரமான முயற்சிகள் எடுக்கப்படுகின்றன இஸ்ரேல் நாட்டில். கடல் நீரைக் குடிநீராக மாற்றும் அரிய சாதனையில் ஈடுபட்டு வெற்றி கண்டுள்ள நாடல்லவா அது? இஸ்ரேலில் ஆண்டுக்கு 8 பில்லியன் கன மீட்டர் மழை பெய்கிறது. ஆனால் அதில் 1.2 பில்லியன் கன மீட்டர் தண்ணீர்தான் பயன்படுத்தப்படுகிறது. மீதமுள்ள பெரும் பகுதி நீர் வீணாகிவிடுகிறது. பாறைகள் மிகுந்த, விவசாயத்துக்குப் பயனற்ற செங்குத்தான பிரதேசங்களில் பொழியும் மழைநீரைப் பூமி உறிஞ்சி விடாமல் தடுத்து அதனைப் பள்ளமாக உள்ள இடங்களில் தேக்கி வைத்து விவசாயத்துக்கும் குடிநீருக்கும் பயன்படுத்துவதில் ஈடுபட்டுள்ளார் டாக்டர் டேனியல் ஹில்லெல் என்ற இஸ்ரேலிய மண்வள இயல் வல்லுநர். ஹீப்ரு பல்கலைக் கழக விஞ்ஞானிகள், சரிவுகளில் பொழியும் மழை நீரைப் பூமி உறிஞ்சிவிடாமல் தடுக்கச் செயற்கை முறைகளைக் கையாண்டு வருகின்றனர். நீர் ஓடும் பகுதிகளில் உள்ள புல் பூண்டுகளை அழித்து, அங்குள்ள கற்களை யெல்லாம் அப்புறப்படுத்தி, தரையை மழுமழுப்பாகச் சமன் செய்கின்றனர். மழைக்கு அணியும் மேலங்கி (Water Proof Rain Coat)யின் மீது விழும் நீரை அது உறிஞ்சுவதில்லை. தெறித்துக் கீழே விழுகிறதல்லவா? அவ்விதமே பூமி உறிஞ்சாமல் புறக்கணிக்கும் வண்ணம் ரசாயனப் பொருள்களின் உதவியைக் கொண்டு பூமி பண்படுத்தப்படுகிறது. இவ்விதம் ஓடிவரும் நீரை இயற்கையாக அமைந்த



குளங்களிலும் செயற்கையாகக் கட்டப்பட்ட அணைக் கட்டுகளிலும் தேக்கி விவசாயத்துக்கும் குடிநீருக்கும் பயன்படுத்தும் முயற்சி இஸ்ரேலில் நடந்து வருகிறது. இதனாலெல்லாம் இன்று 80 முதல் 90 சதவிகிதம் மழைநீர் விரயமாகாமல் தடுக்கப்படுவதாகக் கூறுகிறார் டாக்டர் ஹில்லெல்.

ஐ.பி.எஸ். - தகவல்: ரா. பா.

---

பிறகு பிடிலை முத்தமிட்டுவிட்டு அதனைச் சைத்தானிடம் கொடுத்து விட்டான். சைத்தானும் பிடிலைப் பெற்ற மகிழ்ச்சியுடன் காற்றிலும் கடிவேகமாக மறைந்துவிட்டான்.

அழுக்கு உடையிலிருந்த நாடோடி தன் கையிலுள்ள தங்கத்தைக் கொண்டு நல்ல உடைகளும் உணவும் வாங்க நகரத்துக்குச் சென்றான். பிறகு திரும்பவும் ஓடைக்கு வந்து தன் பைகள் அனைத்திலும் தங்கத்தை நிரப்பிக் கொண்டான். இப்பொழுது நாடோடி பணக்காரனாகி விட்டான்! அவன் இப்பொழுது மகிழ்ச்சி வெள்ளத்தில்தானே அமிழ்ந்திருக்க வேண்டும்? ஆனால் நாடோடி துக்க மயமாகக் காணப்பட்டான். பிடிலைத் துறந்தது அவனைத் துக்க சாகரத்தில் மூழ்க அடித்துவிட்டது. மூன்று நாட்கள் ஓடைக் கரையில் அயர்ந்து போய் உட்கார்ந்திருந்தான்.

திடீரென்று அந்தச் சைத்தான் அவன் முன்னால் வந்து நின்றான். அவனுக்கு ஒரே கோபம்! "நீ தங்கத்தை எடுத்துக் கொண்டாய். ஆனால் எனக்கு உபயோகமற்ற ஒரு பிடிலைத் தந்தாய். நான் பிடில் வாசித்தால் மக்கள் விரும்பிக் கேட்கவில்லை. ஓட்டமாக ஓடுகிறார்கள். சுத்த மோசமான வாத்தியம்!" என்று கூறிப் பிடிலையும் வில்லையும் அவனை நோக்கி வீசிப் போட்டான்.

நாடோடி மிகுந்த மகிழ்ச்சியுடன் அவற்றைப் பற்றிக் கொண்டான்.

"நான் உன்னை மாதிரி ஏன் இனிய இசையை எழுப்ப முடியவில்லை?" என்று சைத்தான் கேட்டான்.

"அது இயற்கை. நான் பிடிலை விற்பதாகத்தான் வாக்குறுதி தந்தேன். ஆனால் என் இதயத்தை அல்ல. பிடிலில் என் இதயத்தையே செலுத்தி யிருந்தேன். ஆனால் உன்னிடம் விற்கும்போது என் இதயத்தை எடுத்துக்கொண்டே உன்னிடம் பிடிலைக் கொடுத்தேன்!" என்றான் நாடோடி.

அந்தப் பிடிலின் துவாரத்தில் ஒரு பெரு மூச்சு விட்டான் நாடோடி. அடுத்த கணம் நாடோடி இதயத்தை உருக்கும்படியாக இசை எழுப்பினான். அந்த இசையில் மயங்கிச் சைத்தானும் நடனமாடும்படி ஆயிற்று. கடைசியில் சைத்தான் உக்கிரமான கோபத்தோடு மறைந்தான்.

நாடோடி தன் அருமைப் பிடிலுடனும் தங்கத்துடனும் தன் வழியே சென்றான். நாடோடி இப்படித்தான் அந்தச் சைத்தானை வெற்றி கொண்டான். அதன் பிறகு பலப் பல நாடோடிகள் பிடில்களில் இனிய இசை பொழிந்து நெஞ்சை நிரப்பினார்கள்.

ஆங்கிலத்திலிருந்து

தமிழாக்கம்: **பி. எஸ். மணி**





சமையலுக்குச் சிறந்தது

# காமதேனு வனஸ்பதி



## காமதேனு

இருமுறை
சுத்திகரிக்கப்பட்ட
தாவர எண்ணெ





மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை-2 ● சேலம் ஜில்லா ● தமிழ் நாடு



## அலகாபாத் பாங்கில் ஸேவிங்ஸ் பாங்க் கணக்குத் தொடங்குவது சிறுபிள்ளை விளையாட்டுப் போன்றது

*இன்றே ஒரு ஸேவிங்ஸ் பாங்க் கணக்குத் தொடங்குங்கள்*

அலகாபாத் பாங்கிற்கு வந்து எங்களில் யாரிடமாவது கேளுங்கள். ரு. 5 மட்டும் செலுத்தி, உடனே ஒரு சேமிப்புக் கணக்குத் தொடங்கி விடலாம். அவ்வளவு சுலபம். நீங்கள் ஒழுங்காகச் சேமித்து வரும் சிறு தொகை எவ்வளவு சீக்கிரமாகப் பெருகி வருகிறது என்று ஆச்சரியப்படுவீர்கள். இன்னும் சௌகரியங்கள், சேவைகள்......





**அலஹாபாத் பாங்க்**

ஹெட் ஆபீஸ்: 14, இந்தியா எக்ஸ்சேஞ்ஜ் பிளேஸ்,
கல்கத்தா-1

சேவைகள் தாராளமாகப் பழகுவதற்குரிய தென்று உணர்த்துகிற பாங்க்

● 'ஜாகப் . ப்ராட்' என்பவர் அமெரிக்காவின் தலைசிறந்த நகைச்சுவையாளர்களுள் ஒருவராகக் கருதப்படுபவர். உலகிலேயே அதிக அளவில் நகைச்சுவைக் களஞ்சியங்களைத் தொகுத்து வெளியிட்டவர். அவருடைய புத்தகத் தொகுப்பிலிருந்து சில தமாஷ் துணுக்குகள் இவை :



## சிரிக்காத சிரிப்பே இல்லை !

○ "வீட்டில் என்னுடைய மாமியார் இருப்பது எனக்குத் தொந்தரவாக இருக்கிறது."

"அவளை வெளியே போகச் சொல்ல வேண்டியதுதானே?"

"அதெப்படி முடியும்? நாங்கள் இருப்பது அவளுடைய வீட்டில் அல்லவா?"

○ இரண்டு பெண்மணிகளுக்கிடையே நடந்த உரையாடல்:

"நீ ஏன் இன்னும் திருமணம் செய்துகொள்ளவில்லை?"

"உலகிலேயே அழகான ஆணைத் தேடிக்கொண்டிருந்தேன்."

"கண்டுபிடித்தாயா?"

"ம்...."

"பின்னே ஏன் அவனைக் கல்யாணம் செய்து கொள்ளவில்லை?"

"உலகிலேயே அழகான பெண்ணை அவன் தேடி அலைந்து கொண்டிருக்கிறானாம்!"





○ ஸ்மித் என்பவர் ஒரு பிரபல வக்கீலாக விளங்கினார். ஒருமுறை ஒரு வழக்கில் எதிர்க் கட்சி வக்கீல் நீதிபதியிடம், "நான் நேற்று ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தேன். அதனால் ஒரே களைப்பாக இருக்கிறது" என்றார்.

உடனே ஸ்மித் "யுவர் ஆனர்! எனக்கும் களைப்பாக இருக்கிறது" என்றார்.

"ஏன்!" என்றார் நீதிபதி.

"எதிர்க் கட்சி வக்கீல் நேற்றுக் கூட்டத்தில் பேசியதை நான் கேட்டுக் கொண்டிருந்தேன்" என்றார் ஸ்மித்!



○ சலூன்காரர் கேட்டார்: உங்கள் முடி நிறைய உதிர்ந்திருக்கிறதே. எங்கள் தயாரிப்பான 'குல்குல்' தைலத்தை உபயோகப்படுத்திப் பார்த்தீர்களா?

"இல்லை. அதை உபயோகப் படுத்தாமலே முடி உதிர்ந்திருக்கிறது!" என்றார் வாடிக்கையாளர்!



○ பிரபல நாவலாசிரியர் 'ஜோல் ஸாயரை' ஓர் இளம் எழுத்தாளர் சந்தித்துக் கேட்டார்: "சார், ஒரு நாவலில் எத்தனை வார்த்தைகள் இருக்க வேண்டும்?"

"65,000 வார்த்தைகள்" என்றார் ஜோல்.

"அட கடவுளே !"

"ஏன்? என்ன விஷயம்?"

"அப்படியானால் நான் எழுதிக் கொண்டிருக்கும் நாவல் முடிந்து விட்டதே!" - தொகுப்பு: கே.வி. முரளி



## பேச்சு பின்னால் சவாரி முன்னால்!

அண்மையில் ரஷ்ய கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி அமெரிக்காவுக்கு விஜயம் செய்தாரல்லவா? அவரது வருகைக்குச், சில வாரங்கள் முன்பாகவே அவருக்கு என்ன பரிசு பிரியமாயிருக்கும் என்று அமெரிக்க அரசு விசாரித்து அறிந்து கொண்டது. இரு தலைவர்களும் பேச்சு வார்த்தை நடத்திய காம்ப்டேவிட் என்னும் இடத்தில் அவர்கள் வருவதற்கு முன்னதாகவே ஒரு லிங்கன் காண்டினென்டல் காரைக் கொண்டு வந்து மறைவாக வைத்திருந்தார்கள். பிரெஷ்னெவும் நிக்சனும் பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருந்த சமயம் இடையே அதனை நிறுத்திவிட்டு, நிக்சன் பிரெஷ்னெவை வெளியே அழைத்து வந்து அந்தக் காரைக் காண்பித்தார்.

பிரெஷ்னெவுக்கு மிக்க மகிழ்ச்சி. பேச்சு வார்த்தையைத் தொடர்ந்து நடத்த நிக்சன் அழைத்த போது, 'அதைப்பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்று பிரெஷ்னெவ் கூறி நிக்சனையும் காரில் ஏற்றிக் கொண்டு சவாரிக்குக் கிளம்பி விட்டார்!

ஆதாரம்: 'டைம்'
தகவல்: கே. சங்கரன்

ஸிசிலிக் கதை



இதாலிக்குக் கீழே உள்ள ஸிஸிலி தீவு 1860 முதல் இதாலிய ஆளுகைக்கு உட்பட்டிருந்தாலும் இதற்கெனத் தனி சரிதமும் தொன்மையான நாகரிகமும் உண்டு. ஸிஸிலியில் பிறந்த இக்கதாசிரியர் 1934ல் இலக்கியத்துக்காக நோபல் பரிசு பெற்றார். ஒரே குழந்தை உள்ளவர்களின் வாஞ்சைக்கும் பல குழந்தைகள் உள்ளவர்களின் பாசத்துக்கும் பாகுபாடு உண்டா? பாசமோ, துயரமோ, பிரிந்து அளிக்கப்படும் லோகாயதப் பொருளா? இக்கேள்விகளுக்குக் கதை மூலம் விடை காண முயல்கிறார்.

ரோம் நகரத்தை விட்டு இரவு எக்ஸ்பிரஸ் வண்டியில் புறப்பட்டவர்கள், பாப்ரியானோ என்ற சின்னஞ்சிறு ஸ்டேஷனில் விடியற்காலை வரை காத்திருக்க வேண்டும். அப்போதுதான் ஸல்மோனா கிராமத்தை இணைக்கும் சிறிய பழங்கால லோக்கல் வண்டியில் பிரயாணம் செய்து தங்கள் பயணத்தை மேற்கொண்டு தொடர முடியும்.

அந்தச் சின்னஞ்சிறு ஸ்டேஷனுக்கு விடியற்காலை ஒரு வண்டி வந்து நின்றது. அதன் இரண்டாவது வகுப்புப் பெட்டியில், இரவெல்லாம் புழுக்கத்திலும் புகையிலும் நெருக்கியடித்துக் கொண்டு அவதிப்பட்டவாறு ஐந்து பேர் பிரயாணம் செய்து வந்தனர். போதாக் குறைக்கு ஒரு பருத்த பெண் பிள்ளை வேறு மூட்டையெனத் திணிக்கப்பட்டாள். துயரமே உருவாகத் தோன்றிய அவளுக்குப் பின்னால் மூக்கி முனகிக் கொண்டு அவள் கணவரும் ஏறினார். அவர் ஒல்லியாகவும் பலவீனமாகவும் இருந்தார். அவர் முகம் பேயறைந்தாற்போல் வெளிறிக் கிடந்தது. அவரது சின்னஞ் சிறு கண்கள் கூச்சத்தால் இங்குமங்கும் மருள மருளப் பார்த்துக் கொண்டிருந்தன.

கடைசியில் ஒருவாறு இடம் பிடித்து உட்கார்ந்த பின்னர் தம் மனைவிக்கு இடம் கொடுத்ததற்காக அவர் சக பிரயாணிகளுக்கு நன்றி தெரிவித்தார். பிறகு தம் மனைவியின் பக்கம் திரும்பி, ''சௌகரியமாக இருக்கிறதா?'' என்று கேட்டுக் கொண்டே அவள் அணிந்திருந்த கோட்டின் கழுத்துப் பட்டை நிமிர்ந்திருந்ததை மடக்கி விட்டார்.

அவர் கேள்விக்குப் பதில் சொல்வதற்குப் பதில் மடக்கிவிடப்பட்ட தன் கோட்டின் கழுத்துப் பட்டையை மேலே நிமிர்த்தி விட்டுக்கொண்டு தன் முகத்தை யாரும் பார்க்காவண்ணம் அவள் மறைத்துக் கொண்டாள்.

முகத்தில் சோகம் கலந்த முறுவலைப் படர விட்டவாறு அவள் கணவர், ''மிகவும் கெட்ட உலகம்!'' என்றார்.

இப்படிச் சொன்னதோடு அமையாமல், தன் மனைவி சக பிரயாணிகளின் அனுதாபத்துக்குரியவள் என்பதை விளக்குமுகமாக யுத்தத்துக்குத் தன்னுடைய ஒரே மகனை அனுப்ப வேண்டியிருக்கும் பரிதாப நிலையை எடுத்துக் கூறினார்.

அவர்களுக்கு இருபது வயதில் ஒரு மகன். இருவரும் அவனிடம் உயிரையே வைத்திருந்தனர். அவன், மேல் படிப்புக்காக ரோம் நகரத்துக்குச் சென்றபோது அவன் மீதிருந்த பாசம் காரணமாக, ஸல்மோனா கிராமத்து வாழ்க்கையை ஏறக்கட்டிவிட்டு, அவர்

# போர்

## லூயிகி பிராண்டெல்லோ

களும் மகனுடன் ரோம் நகரத்துக்குப் போய்ச் சேர்ந்தனர். அங்கு அவனை ஓர் உத்தரவாதத்தின் பேரில் படை வீரனாகச் சேர்த்துக் கொள்ள அனுமதித்தனர். அதாவது குறைந்தது ஆறுமாத காலத்துக்காவது அவனைப் போர்முனைக்கு அனுப்புவதில்லை என்று அதிகாரிகள்

உத்தரவாதம் அளித்த பின்னரே சேர்த்தனர். ஆனால் இப்பொழுது திடீரென்று இன்னும் மூன்று நாட்களில் - அவன் போர்முனைக்கு அனுப்பப்பட விருக்கிறான்! தன் கணவர் விஷயத்தை எடுத்துக் கூறிய முறை சகப் பிரயாணிகளிடையே கொஞ்சமும் அநுதாபத்தை விளைவிக்காது என்று தோன்றியது அவளுக்கு. அதோடு அந்தப் பிரயாணிகளும்கூட ஏறத்தாழ அவளைப் போலவே பரிதாப நிலையில் இருக்கலாம் அல்லவா? எனினும் அவர்களது அநுதாபத்தைச் சம்பாதிக்கத் தன்னால் இயன்றளவு முக்கி முனைப் பார்த்தாள்.

அவர்கள் கதையைக் கேட்ட ஒரு சக பிரயாணி, "உங்கள் மகன் இப்பொழுதுதானே போர்க்களத்துக்குப் போகப் போகிறான்? என் மகன் போர்ப் பிரகடனம் செய்யப்பட்ட அன்றே களத்துக்கு அனுப்பப்பட்டான். பிறகு இரண்டுமுறை படுகாயமுற்றுத் திரும்பி வந்தான். இரண்டு முறையும் அவனுக்கு சிகிச்சை செய்து, குணப்படுத்திப் போர்க்களத்துக்கு அனுப்பி யிருக்கிறோம். இதைப் பார்க்கும்போது உங்கள் நிலை எவ்வளவோ தேவலை. கடவுளுக்கு நன்றி செலுத்துங்கள்" என்றார்.

இன்னொரு பிரயாணி, "என் கதையைக் கேளுங்கள். என் இரண்டு பிள்ளைகளும் மூன்று மருமகன்களும் போர்க்களத்தில் இருக்கின்றனர்!" என்றார்.

"இருக்கலாம். எங்களுக்கு இவன் ஒரே மகன்" என்று 'ஒரே'யைச் சற்று அழுத்திச் சொன்னார் கணவர்.

"அதனால் என்ன? பிரமாத வித்தியாசம் என்ன இருக்கிறது? ஒரு குழந்தை இருந்தால் அதிகமாகச் செல்வம் கொடுத்துக் கெடுக்கலாம். அவ்வளவே தவிர, வேறு குழந்தைகள்



## திரு பாஸ்கர மேனன்

இந்திய இசை உலகில் கிராமபோன் கம்பெனியைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. இக்கம்பெனியின் மூலக் கம்பெனி ''எமி லிமிடெட்'' என்பது. இதன் தலைமைக் காரியாலயம் இங்கிலாந்தில் உள்ளது. இசைத்தட்டுக்கள் மூலம் பதிவுச் சங்கீதத்தை வழங்குவதில் இக்கம்பெனிதான் உலகத்திலேயே மிகப் பெரியது. இத்தகைய உலகப் பிரசித்தி பெற்ற ஸ்தாபனத்தின் டைரக்டர்களில் ஒருவராக நம் நாட்டு திரு பாஸ்கர மேனன் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. திரு பாஸ்கர மேனன் பெற்றுள்ள இவ்வுயர் பதவி குறித்து அவரை வாழ்த்துகிறோம்.



இல்லாததால் ஒரே குழந்தையிடம் அதிகமாக அன்பு செலுத்தி விட்டதாகச் சொல்ல முடியாது. பெற்றோரின் அன்பு, ரொட்டித் துண்டைப் பிய்த்துப் பிய்த்து எல்லாக் குழந்தைகளுக்கும் சமமாகப் பங்கிட்டுத் தருவது போல் அல்ல. ஒவ்வொரு குழந்தைக்கும் தந்தை தன் முழு அன்பையும் செலுத்துகிறான். ஒன்று இருந்தாலும் சரி, பத்தாக இருந்தாலும் சரி, தந்தையின் அன்பில் பாகுபாடோ, ஏற்றத் தாழ்வோ கிடையாது. இப்பொழுது என் இரண்டு பிள்ளைகளுக்காகத் துயரப்படுகிறேன் என்றால், இவனுக்குப் பாதி துயரம், அவனுக்குப் பாதி துயரம் என்று என் துயரம் பங்கிடப்படுவதில்லை. அதற்கு மாறாக இரண்டு மடங்காகப் பெருகுகிறது.''

இதைக் கேட்டுத் திணறிப்போன கணவர், ''நீங்கள் சொல்வது மெய்தான். ஆனால்... உங்களுக்கு அப்படி நேர வேண்டாம்..... ஒருவேளை ஒரு தந்தையின் இரண்டு புதல்வர்களில் ஒருவன் இறந்து போனால், தந்தைக்கு ஆறுதல் கூற இன்னொருவனாவது இருக்கிறானே என்று மனத்தைச் சமாதானப் படுத்திக் கொள்ளலாம் அல்லவா?'' என்றார்.

இதைக் கேட்ட அந்தப் பிரயாணி, ''ஆமாம்; ஆறுதல் கூற ஒரு மகன் இருப்பான்தான். கூடவே அவனுக்காகப் பெற்றோர் உயிர்வாழ வேண்டிய துர்ப்பாக்கிய நிலையும் ஏற்படும். அதுவே, ஒரே பிள்ளையாக இருந்து, அவன் இறந்து விட்டானானால், அதனால் ஏற்படும் துயரத்தைத் தவிர்க்கத் தந்தை தன் உயிரை மாய்த்துக் கொள்ளலாம்; தீராத் துயரத்துக்கு முடிவு கட்டலாம். இந்த இரண்டு நிலைகளில் எது மோசமான நிலை? உங்களைவிட என் நிலை மிகவும் பரிதாபத்துக்குரிய நிலை இல்லையா?'' என்றார்.

கண்கள் சிவந்து பருத்த சரீரத்துடன் உட்கார்ந்திருந்த ஒரு பிரயாணி இடையில் புகுந்து ''பிதற்றல்!'' என்றார்.

அவர் கோபம் அவர் கண்களிலும் குரலிலும் வெளிப்பட்டது. அவருடைய பலவீனமான உடம்பு கோபத்தின் வேகத்தைத் தாங்க முடியாமல் துடித்தது.

''பிதற்றல்!'' முன் பல் இழந்த வாயைக் கைகளால் மறைத்துக் கொண்டு மீண்டும் ஆக்ரோஷத்தோடு கூறினார்: ''நம்முடைய நன்மையை உத்தேசித்துத்தான் நாம் குழந்தைகளைப் பெறுகிறோமா என்ன?''

துயரம் தாங்க மாட்டாமல் மற்றப் பிரயாணிகள் அவரை முறைத்துப் பார்த்தனர். போர் தொடங்கியதுமே தம் மகனைப் போர்க்களத்துக்கு அனுப்பி வைத்திருந்த ஒரு பிரயாணி பெருமூச்சு விட்டுக் கூறினார்: ''நீங்கள் சொல்வது ரொம்பச் சரி. நம் குழந்தைகள் நமக்குரியவர்கள் அல்ல; தேசத்துக்கு உரியவர்கள்...''

''இது அதைவிட சர்வ பிதற்றல்'' என்று அந்தப் பருத்த மனிதர் கூறிவிட்டு மேலே தொடர்ந்தார்: ''நாம் குழந்தைகளைப் பெறும்பொழுது தேசத்தைப் பற்றி நினைக்கிறோமா? நமக்குக் குழந்தைகள் ஏன் பிறக்கிறார்கள் என்றால்... சரி, அவர்கள் பிறக்க வேண்டும். அதனால் பிறக்கிறார்கள். அவர்கள் வளர்ந்து தக்க வயதடையும்போது, அவர்கள் நம் உயிரையும் வாழ்க்கையையுமே கொண்டு செல்கிறார்கள். இதுதான் உண்மை. நாம் அவர்களுக்கு உரியவர்களே தவிர, அவர்கள் நமக்கு உரியவர்கள் அல்ல. அவர்கள் இருபது வயதடையும்போது நாம் நம் இருபது வயதில் எப்படி இருந்தோமோ, அப்படி இருக்கிறார்கள். நமக்கும் தகப்பனார், தாயார் இருந்தார்கள். அவர்களைத் தவிர, இன்னும் என்னென்னவோ, யார் யாரோ இருந்தார்கள்.... பெண்கள், சிகரெட்டுகள், கனவுகள், புது உறவுகள்... தேசம் — ஆம், அப்போது தேசம் நம் சேவையைக் கேட்டிருந்தால் மகிழ்ச்சியோடு அளித்திருப்போம் - நாம் இருபது வயதினராக இருந்தபோது — நம் பெற்றோர்கள் வேண்டாம் என்று கூறியிருந்தாலும் கேட்டிருக்க மாட்டோம். இப்போது, நமது இந்த வயதில் நமது தேசபக்தி, நமக்கு நம் குழந்தைகளிடமிருக்கும் பாசத்தை விட அதிகம்தான். நம் பிள்ளைகள் போர்முனையில் ஏற்றுள்ள ஸ்தானத்தை நம்மில் யாராகிலும் ஏற்க நேர்ந்தால் மகிழ்ச்சியோடு ஏற்க மாட்டோமா என்ன?''

வெறும் வாய்ப் பேச்சு அல்ல புதிய ஸிக்னல் திறன்

# இதோ நிரூபணம் :




## புதிய ஸிக்னல் ஒன்றுதான் பற்சிதைவையும் வாய் நாற்றத்தையும் தடுத்து நிறுத்திக் காண்பிக்கிறது

**புரட்சிகரமான புதிய பல்சுத்திகரிப்பு மூலப் பொருளின் அடிப்படையிலே.**

(காப்புரிமைச் சட்ட எண் 114718ன் கீழ், புரட்சிகரமான இப் புதிய பல்சுத்திகரிப்பு பொருளிலே ஃப்ளூரைடு இணைக்க உரிமைபெற்ற பற்பசை புதிய ஸிக்னல் ஒன்றுதான்.)

**பல் வைத்தியரே விளக்குவார்**
புதிய ஸிக்னலின் நிரூபணமான தன்மைகளை.

**பரிசோதனைகள் நிரூபித்தன :**

விஞ்ஞானிகள் கின்க்கல், ஸ்டோல்டே இருவரும் நிரூபித்தனர்: ஃப்ளூரைடு அடங்கிய ஸிக்னல் (400 குழந்தைகளிடையே) பற் சிதைவை 33 சத விகிதம் குறைத்துவிட்டது.
எஸ்-14, உபயோகித்த 15 நிமிடங்களில், வாய் நாற்றத்தை 95 சத விகிதம் குறைத்துவிட்டது என நிரூபித்தார் டாக்டர் விண்டு.

புரட்சிப் புதுமையான பல்சுத்திகரிப்பு மூலப் பொருளிலே ஃப்ளூரைடு, எஸ்-14 இரண்டும் இணைந்தது புதிய ஸிக்னல். வேறெந்தப் பற்பசையிலும் இராத முப் பொருத்த முழுமை இது.
பல் பராமரிப்பு பற்றிய முழு விவரப் புத்தகம் ஒன்றை இலவசமாகப் பெற, எழுதுக: இந்துஸ்தான் லீவர் லிட்., க்ளினிக்கல் டிபார்ட்மெண்ட், போஸ்ட் பாக்ஸ் 409, பம்பாய்-1. (தபால் செலவுக்கென 25 பைசா தபால் வில்லைகளை இணைக்கவும்.)




இந்துஸ்தான் லீவரின் உத்தரவாதம் பெற்றது ஸிக்னல். தமிழ்நாடு, கேரளா, ஆந்திரா, மைசூர் மாநிலங்களில் மட்டுமே கிடைக்கிறது.

## ஃப்ளூரைடு, எஸ்-14 இரண்டும் அடங்கிய பற்பசை வேறில்லை

லின்டாஸ்.SG. 50-193 TH(R)

### 'பணி' மனை!

ஒரு முதன் மந்திரியிடம் ஒரு தொண்டர் ஓடோடி வந்து சொன்னார்: ''சார், நீங்கள் சொன்னது மாதிரியே நான் ரகசியமாக விசாரித்துப் பார்த்தேன். கட்சிப் பணிக்காகப் பதவியைத் துறக்க இரண்டு பேர் இருக்கிறார்கள்; பதவிக்காகக் கட்சிப் பணியைத் துறக்க இரண்டாயிரம் பேர் இருக்கிறார்கள்!''

- கோட்டா மோகன்

---

அவர் சொல்வதை ஆமோதிப்பது போல் நாற்புறமும் அமைதி சூழ்ந்தது. அந்தப் பருத்த மனிதர் மேலே தொடர்ந்தார்:

''அப்படியானால் நம் மக்கள் இருபதாவது வயதில் பெறக் கூடிய உணர்ச்சிகளை நாம் ஏன் மதித்து நடந்து கொள்ளக் கூடாது? நம்மீது அவர்களுக்கு இருக்கும் பாசத்தை விட, அவர்களுக்குத் தேசத்தின் மீது அதிக பாசம் இருப்பது நியாயமே அல்லவா? அப்படியே நம்மைப் பற்றிக் கையாலாகாதவர்கள்; வீட்டில் முடங்கிக் கிடக்க வேண்டியவர்கள் என்று அவர்கள் நினைத்தால் அதுவும் இயல்பான உணர்ச்சியே அல்லவா? தேசம் என்று ஒன்று இருக்க வேண்டியது அவசியம் என்றால், மனிதன் உயிர் வாழ்வதற்கு உணவு எவ்வளவு அவசியமோ, அவ்வாறு அந்தத் தேசத்தைப் பாதுகாக்கப் போர்க்களத்துக்குப் போக வேண்டியதும் அவசியம் அல்லவா? இப்பொழுது ஒருவன் இளமையில் மகிழ்ச்சியோடு இறந்தான் என்றால், அதாவது வாழ்க்கையின் துன்பங்கள், பொருமைகள், ஏமாற்றங்கள், கசப்புக்கள், இவை யாதொன்றும் அனுபவியாமல் இறந்தான் என்றால் அதைவிடச் சிறந்த வாழ்வு வேறு என்ன இருக்கிறது? ஆகவே ஒவ்வொருவரும் அழுவதை நிறுத்த வேண்டும்; எல்லோரும் சிரித்து மகிழக் கற்க வேண்டும் — நான் செய்வது போல். கடவுளுக்கு நன்றி செலுத்தவும் பழக வேண்டும். ஏனெனில் என் மகன் இறப்பதற்கு முன்னால், தான் எந்தச் சிறந்த முறையில் தன் வாழ்க்கையை முடித்துக்கொள்ள வேண்டும் என்று விரும்பினானோ அம்முறையில் தன் உயிர் பிரிவது தனக்கு மிகுந்த திருப்தியை அளிப்பதாக எனக்கு எழுதினான். அதனால்தான் நான் துயரத்தை நினைவூட்டும் அங்கியைக்கூட அணியவில்லை.''

அவர் கண்களில் மட்டும் நீர் முட்டி நின்றது. சிறிது நேரம் கழித்து அவர் ஒரு சிரிப்புச் சிரித்துப் பேச்சை முடித்தார். அது ஓர் ஏக்கத்தின் அறிகுறியாகக்கூட இருக்கக் கூடும்!

மற்றவர்கள், ''ஆம்; அவர் சொல்வது வாஸ்தவம், உண்மை!'' என்று பலபடியாக ஆமோதித்தனர்.

ஒரு மூட்டைபோல் உள்ளே திணிக்கப்பட்டு உட்கார்ந்திருந்த அம்மையார் அவர் கூறிய மொழிகளைக் கூர்ந்து கேட்டாள். சென்ற மூன்று மாதங்களாகத் தன் கணவர் கூறிய ஆறுதல் மொழிகளிலும் மற்றவர்கள் கூறிய ஆறுதல் மொழிகளிலும் அவள் ஆறுதல் காணவில்லை. ஒரே மகன் போர்க்களத்துக்கோ, சாவுக்கோ, அல்லது ஆபத்துக்கள் நிறைந்த காரியங்கள் பண்ணவோ, போக நேரிட்டால் அவனைப் பெற்ற தாய் அதனை எப்படி ஏற்க வேண்டும் என்பதை உணர்ந்ததில்லை. ஆகவே அவள் துயர் அதிகமாகிக் கொண்டுதான் வந்தது.

ஆனால் இப்பொழுது, தன் சகப் பிரயாணி கூறிய வார்த்தைகள் அவளைப் பேராச்சரியத்தில் மூழ்கடித்தன. தன் துயரத்தை உணர்ந்து தனக்குத் தக்கபடி ஆறுதல் கூறாதது மற்றவர்கள் குற்றமல்ல என்பதை உணர்ந்தாள். அது மட்டுமல்ல. தங்கள் மக்களைப் போர்க்களத்துக்கும் மறலியின் பிடிக்கும் அனுப்பி வைத்துவிட்டு, அழாமல் நெஞ்சுரத்துடன் இருக்கிறார்களே, அவர்கள் நிலைக்குத் தான் உயராதது தன் தவறு என்பதை உணர்ந்தாள்.

அவள் தான் உட்கார்ந்திருந்த மூலையிலிருந்து தன் தலையை நிமிர்த்தி அந்தப் பருத்த மனிதர் தம் மகன் போர்க்களத்தில் எப்படிச் சந்தோஷமாகப் போரிட்டுக் கொண்டே தன் நாட்டுக்காக உயிர் துறந்தான் என்பதை மிக மிக விவரமாகச் சொல்வதைக் கேட்டாள், தான் இதுவரை கனவில்கூட காணாத அதிசய உலகத்தில் அடியெடுத்து வைத்தாற்போல் மகிழ்ந்து போனாள். தன் மகன் இறந்துபட்டது குறித்து, இப்படித் தீரமாகப் பேசும் தந்தையை ஒவ்வொருவரும் பாராட்டியதைக் கண்டு பூரித்துப் போனாள்.

பிறகு என்ன தோன்றியதோ என்னவோ, இதுவரை பேசப்பட்டு வந்த விஷயங்கள் ஒன்றையுமே கேளாதவள் போலவும், ஏதோ கனவு கண்டு விழித்துக் கொண்டவள் போலவும் அவர் பக்கம் திரும்பி, ''அப்படியானால் உங்கள் மகன் உண்மையிலேயே இறந்துவிட்டானா?'' என்று ஒரு கேள்வி கேட்டாள்.

ஒவ்வொருவரும் அவளை முறைத்துப் பார்த்தனர். அந்தக் கிழவர்கூட அவள் பக்கம் திரும்பி, தம்முடைய பெரிய, உருண்ட நீர் முட்டி நின்ற கண்களை அவள் மேல் பதித்துப் பார்த்தார். கொஞ்ச நேரம் அவள் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல முயன்றார். வார்த்தைகள் வரவில்லை. அவளைப் பார்த்தார், பார்த்தார், அப்படிப் பார்த்தார். அப்போது தான் அவருக்குப் பொறி தட்டினாற் போல் ஒன்று விளங்கியது. அவள் கேட்ட அசட்டுக் கேள்வியின் மூலம் திடீரென்று தன் மகன் இறந்துவிட்டதையும் இனி என்றுமே திரும்பி வர முடியாத உலகுக்குச் சென்றுவிட்டதையும் உணர்ந்தார். அவர் முகம் சுருங்கியது. பயங்கரமான உருவம் எடுத்தது. அவசரமாகத் தம் பையிலிருந்து கைக்குட்டையைப் பற்றி இழுத்தார். எல்லோரும் வியந்து நின்றனர் — அவர், உள்ளத்தைப் பிளக்கும் சோகக் குரல் எழுப்பிக் கட்டுப்படுத்த முடியாதபடி விம்மி விம்மி அழுதார்.

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்: **எஸ். வி. எஸ்**

**Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031**
**Managing Editor: T. Sadasivam**

# வாங்குவீர்

# எச்எம்வி ரெக்கார்ட் ப்ளேயர்



## எச்எம்வி பியஸ்டா

ஒரு முழுமையான ரெகார்ட் ப்ளேயர்

**ரூ. 300 மட்டுமே**

(எக்ஸைஸ் தீர்வை உள்பட, உள்ளூர் வரிகள் தனி)




எச்எம்வி பியஸ்டா நீங்கள் வியப்புறும் வகையில் தெளிவாக ஒலிக்கிறது. காரணம்: அதன் ஸாலிட் ஸ்டேட் ஆம்ப்ளி பையர், சன்னமாய் இயங்கும் பிக்-அப் கருவி, கழற்றி மாட்டக் கூடிய காபினெட்டில் அமைந்த ஸ்பீக்கர். அது மட்டுமா? அதைச் சுலபமாய்க் கையில் எடுத்துச் செல்லலாம். ஏஸி மெயின்ஸ் அல்லது பாட்டரியில் இயங்கக் கூடியது.

## எச்எம்வி காலிப்ஸோ

உங்கள் ரேடியோவுடன் இணைந்து இயங்கும் ப்ளேயர்

**ரூ. 193 மட்டுமே**

(எக்ஸைஸ் தீர்வை உள்பட, உள்ளூர் வரிகள் தனி)



எச்எம்வி காலிப்ஸோவை உங்கள் ரேடியோவுடன் இணையுங்கள். அதே விநாடியில் அது ரேடியாகிராம் ஆகிறது! நீங்கள் விரும்பும் முறையில் இசைத் தட்டுக்கள் ஒலிப்பதற்கு உறுதியாக உதவுகிறது. அதன் இலேசான பிக்-அப் கருவி, ஏஸி மெயின்ஸ் அல்லது பாட்டரியில் இயங்க வல்லதாக இரு வகைகளில் கிடைக்கிறது.



ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்

GC/1486-A-2 R

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
ஸ்ரீலங்காவில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)







